# துணைவி




அகிலன்

தாகம்
11 சிவப்பிரகாசம் தெரு, பாண்டிபஜார்
தி.நகர் சென்னை - 600 017

துணைவி *(சமூக நாவல்)*
முதற்பதிப்பு : மார்ச் 1951
இரண்டாம் பதிப்பு : 1953
மூன்றாம் பதிப்பு மலிவுப் பதிப்பு : 1958
நான்காம் பதிப்பு : மார்ச், 1966
ஐந்தாம் பதிப்பு : நவம்பர், 1988
ஆறாம் பதிப்பு : மார்ச், 1992
ஏழாம் பதிப்பு : மார்ச், 1997

விலை : ரூ. 20.00



THUNAIVI
Tamil Social Novel
by Akilon

Seventh edition: March 1997
Pages : 108
DHAGAM
11, Sivaprakasam Street
Pondy Bazaar T. Nagar
Chennai - 600 017
Price: Rs. 20.00

ஒளி அச்சுக் கோவை : ஸ்கில் கம்ப்யூட்டர்ஸ், சென்னை - 18
அச்சு : ரோகிணி ஆப்செட் பிரிண்டர்ஸ் சென்னை - 14

## அமரர் அகிலனின் பிற நாவல்கள்

**சித்திரப்பாவை**

*- (பாரதீய ஞானபீடப் பரிசு பெற்றது)*

**வேங்கையின் மைந்தன்**

*- (சாகித்ய அகாதமி பரிசு பெற்றது)*

**கயல்விழி**

*- (தமிழ்நாடு அரசு பரிசு பெற்றது)*

**நெஞ்சினலைகள்**

*- (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது)*

**எங்கே போகிறோம்?**

*- (ராஜா சர் அண்ணாமலை இலக்கியப் பரிசு பெற்றது)*

**பெண்**

*- (கலைமகள் நாராயணசாமி பரிசு பெற்றது)*

**பால்மரக் காட்டினிலே**

**வெற்றித் திருநகர்**

**புது வெள்ளம்**

**வாழ்வு எங்கே?**

**பொன் மலர்**

**சிநேகிதி**

**இன்ப நினைவு**

**அவளுக்கு**

**கொள்ளைக்காரன்**

**வானமா பூமியா?**



# இந்த நாவல்

இந்நாவல் 1949ஆம் ஆண்டில் ‘காலச்சக்கரம்’ இதழில் தொடர்கதையாக வெளிவந்தது. 1951ஆம் ஆண்டு அமுத நிலையத்தினரால் புத்தகவடிவில் வெளி யிடப்பட்டது. 1958-ல் இந்நாவலை மலிவுப் பதிப் பாகவும் அமுத நிலையத்தினர் வெளியிட்டனர். 1973ஆம் ஆண்டு ‘ராணி முத்து’ இதழும் இந்நாவலை வெளியிட்டது.

அதற்குப் பிறகு இந்நாவல் வெளிவரா நிலையில் பல வாசகர்களும் ஆய்வாளர்களும் இந்நாவலின் மறுபதிப்பை வேண்டினர். 4ஆம் பதிப்பு வரை இந்நாவலை வெளியிட்டு வந்தமைக்காகவும் 5ஆம் பதிப்பிலிருந்து இதன் பிரசுர உரிமையைத் தாகம் பதிப்பகத்திற்கு வழங்கியமைக்காகவும் அமுத நிலையத்தினருக்கு எமது நன்றி.

தாகம்

# துணைவி

## 1

**கல்யாணி:**

வெளியே மழை கொட்டுகிறது. நன்றாகக் கொட்டட்டும். வானம் தன் ஆசையெல்லாம் தீர மழை பொழியட்டும். எனக்கு இந்த மாதிரி மழை பெய்வதைக் கண்டால் மிகவும் பிடிக்கும்; நாள் பூராவும் சூரியனை மறைத்துக் கொண்டு பிசுபிசுவென்று தூற்றல் போட்டுக் கொண்டிருப்பதைவிட, சில நிமிஷ நேரம் இப்படி விடாமல் 'சோ'வென்று பெய்தால் எவ்வளவு நன்றாயிருக்கிறது!

சின்னஞ்சிறு சிறுமியாக இருக்கையிலே இந்த மழை மீது எனக்கு அபார மோகம். ஜன்னல் வழியே நின்று சற்று நேரம் வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பேன். திருட்டுக் கண்களால் அம்மா என்னைக் கவனிக்கிறாளா என்று ஜாக்கிரதையாய்ப் பார்த்து விட்டு, மெதுவாக மழை நீரைப் பிடிக்கக் கரங்களை நீட்டுவேன். அதிலும் மனம் திருப்தி அடையாது. தெருவிலே புரண்டு ஓடும் செந்தண்ணீரில் கால்களை நனைத்து, அங்கும் இங்கும் ஓடி விளை யாடினால் என்ன இன்பமாக இருக்கும்! தெப்பமாக நனைத்துக் கொண்டு வந்து, ''அம்மா, துவட்டிவிடு; இந்தப் பொல்லாத மழை என்னை நனைத்துவிட்டது'' என்று சொல்லக்கூடுமானால், அதில் என்ன ஆனந்தம்! ஆனால் அம்மா இருக்கிறாளே. அவளுக்கு இதெல்லாம் எங்கே தெரிகிறது? ஜலதோஷமாம், ஜலதோஷம்! தெருவிலே தண்ணீர் சொட்டச் சொட்ட ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டும், கலப்பையைத் தோளில் சுமந்து கொண்டும்

செல்கிறார்களே குடியானவர்கள், அவர்களுக்கு மட்டிலும் ஜல தோஷம் பிடிக்காதாக்கும்!

அந்தச் சிறிய வயசு ஆசை இன்னும் என்னை விடவில்லை. ஒரே பருவத்தில் மலர்ந்திருக்கும் என்னைப் போன்ற இந்த ஹாஸ்டல் மாணவிகள் அத்தனை பேரும் கொட்டுகிற இந்தப் பெரு மழையில் ஓடி ஆடினால் என்ன? விளையாட்டு மைதானம் காலியாகக் கிடக்கிறது. இப்போது மழையின் விளையாட்டும், நீர்க்குமிழிகளின் கண் சிமிட்டலுந்தான் அங்கே.

அறையில் என்னைத் தவிர வேறு ஒருத்தியும் இல்லை. லீலாவும் காந்தமும் பக்கத்து அறைக்கு வம்பளக்கப் போய் விட்டார்கள். என்னையும் விடாப்பிடியாய் அங்கு இழுத்தாள் காந்தம். ஏதோ பொய் சொல்லி மறுத்து விட்டேன். அடுத்த அறையில் ஒரே பேச்சும் சிரிப்பும் கும்மாளமுமாய் இருக்கின்றன. ஒவ்வொரு சமயம் எல்லோரும் சேர்ந்து 'கலீர்' என்று சிரிக்கும் சத்தம் மழையையும் தாண்டி வந்து என்னை அவர்களிடம் செல்லுமாறு கெஞ்சி அழைக்கிறது. இருந்தாலும் அங்கே செல்ல மனம் இல்லை. தனிமை? அதிலும், வெளி உலகத்தில் 'ஓ'வென்ற பெருங் குரலுடன் மழைத்தாரைகள் பூமிக்குத் தாவி வரும் இந்தச் சமயத்தில், அறை முழுவதும் சாத்திக்கொண்டு, ஜன்னலின் ஒற்றைக் கதவை மட்டிலும் திறந்து வைத்து வெளியே குளுமையை ஊடுருவும் என் போன்றவளின் தனிமையைப் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்?

"கல்யாணி, உஷார்! அடிக்கடி உன்னைக் கவனித்து வருகிறேன். நீ முன்போல் இல்லை. மாலை நேரத்து நிழல்போல் நீண்ட பகற் கனவுகளில் 'தன்னை மறந்த லயந்தனில்' இருந்துவிடுகிறாய். கவலைப்படாதே! எல்லோருக்கும் போல ஒருநாள் எவனோ ஓர் அதிரூப சுந்தரவதனன் அல்லது அவலட்சண அலங்கார சிகாமணி, 'அடி என் ஆரணங்கே! கிளியே மயிலே!'' என்று உன்னை அழைப்பதற்கு வரத்தான் போகிறான். அப்போது, 'என் ஆருயிர்த் துரையே! இளம் வீரச் சிங்கமே!' என்று அவனுக்குக் கச்சிதமாய்ப் பதிலளித்து விட்டால் போகிறது. அந்தச் சமயத்தில் இதெல்லாம் தானாக வந்திடும்; சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை! அதுவரை ஏன் அந்த விவகாரம் எல்லாம் நினைத்து ஏங்குகிறாய்?'' என்று காந்தம் நாலு பேர் இருக்கும்பொழுது ஒரு நாள் சொல்லி

விட்டாள். கேலி செய்வதென்றால் அவளுக்கு இடம், பொருள் எதுவென்றே தெரிவதில்லை. அன்று அவளிடம் முகத்தை ஒரு மாதிரி காட்டியதிலிருந்து திரும்பவும் அந்தப் பேச்சையே அவள் எடுப்பதில்லை. இந்த விஷயத்தில் ஒருத்தியை மற்றவள் பரிகசிக்கத் தான் தெரியுமே தவிர, தான் எப்படி என்று நினைத்துப் பார்க்கத் தோன்றாது. மழை நன்றாகத்தான் பெய்கிறது. தாழ்வாரத்துப் பூச் செடி இந்த மழையில் படும்பாடு! அப்பா, என்ன துடி துடிக்கிறது! தூரத்துத் தென்னை மரங்களே இங்கும் அங்கும் முடி வணங்கிக் கொடுக்கும் போது இந்த மெல்லிய பூங்கொடிகள் கோடை மழைக்கு எந்த மூலை?

ஆமாம்; இது மழைக் காலம் அல்ல. வசந்த ருதுவின் ஆரம்பம். எல்லா இலைகளையும் உதிர்த்து, கலைமான் கொம்புகளைப் போல் மொட்டையாய்த் தோன்றிய வேப்பமரங்கள் இன்று புது மணப் பெண்கள் மாதிரி பசும்தளிர்ச்சேலை உடுத்து வெள்ளைப் பூங் கொத்துச் சூடி நிற்கின்றன. வசந்தத்தின் வரவு என்றாலே உலகத்திற்குக் குதூகலந்தான். எனக்கும் ஏனோ ஒவ்வொரு வருஷமும் இந்தக் காலத்தில் தனி மகிழ்வு ஏற்படுகிறது. எங்கும் புதுமை மணம்; இன்பத் தென்றல்; மகரந்தத் தூள்: மதுரத்தேன்; வண்டின் இன்னிசை!

ஆனால் இந்த வருஷம் மற்ற வருஷங்களைப்போல இல்லை எனக்கு. அப்போதெல்லாம் வசந்தம் வந்து என்னைத் தட்டி எழுப்புவது வழக்கம். சூரியனின் முதற்கிரணத்தைக் காணுவது போல் கண்களைத் துடைத்துக் கொண்டு துள்ளி எழுவேன். இந்த வருஷமோ அதன் வருகைக்காக நான் காத்திருக்க வேண்டிய தாயிற்று. உல்லாசப் பொழுதுபோக்கின் பாதியில் பிரிந்துபோன தோழியை எதிர்பார்ப்பதுபோல் எதிர்பார்த்தேன். இதோ வசந்தத் தோழியும் வந்துவிட்டாள், வழக்கமான புன்சிரிப்புடன்.

உண்மையை மறைப்பானேன்? என் வாழ்விலேயே வசந்த பருவத்தை நான் இப்போதுதான் அடைந்திருக்கிறேன். இன்ப மயமான மலரின் வனப்பை ஒத்த பல கனவுகள் என்னிடம் நிமிஷந்தோறும் தோன்றி மறைகின்றன. சண்பக மரத்தின் உச்சிக் கிளையில் நின்று ஊசலாடும் ஒரு சிறு பூ என்று வேண்டுமானால் என்னைச் சொல்லிக் கொள்ளுங்கள்.

காலம் அறியாமல் வந்து கொட்டிய மழை எவ்வளவு வேகத்துடன் பெய்ததோ, அதே வேகத்தில் நின்று விட்டது. உடனே மேற்கு வானத்தில் சூரியன் சிரித்தான். அவன் ஒளியும் அந்த மழைத் தண்ணீரும் சேர்ந்து தழுவும் இந்த வேளையில் எங்கும் ஓர் மோகன லாகிரி. இதை அநுபவிக்க அந்த வாயாடிகளுக்கு எங்கே நேரம்? வகுப்பில், 'சோமுவின் மூஞ்சியில் எண்ணெய் வழிந்தது; குப்பு தன் முப்பத்திரண்டு பல்லையும் காட்டினான்; சரித்திர வாத்தியார் தூங்கி விழுந்தார்' என்று குதர்க்கம் பேசுவார்கள். ஹாஸ்டலில் வார்டனைப் பற்றியோ அவருக்கு ஆந்தை வேஷம் போடும் மூக்குக் கண்ணாடியைப் பற்றியோ பலமான வாக்குவாதம் நடக்கும்.

சற்று முன்புதான் ஓர் அம்மாள் 'மாணவிகளின் கனவு' என்று பத்திரிகையில் கட்டுரை எழுதியிருந்ததைப் பார்த்தேன். என் போன்ற மாணவிகள் பெரும்பாலும் தங்கள் பொழுதைக் கனவுலகத்தில் செலவழிக்கிறார்களாம். எதிர்காலக் குடும்ப வாழ்க்கையைப் பற்றி என்ன என்னவோ திட்டமிடுகிறார்களாம். ஐ.சி.எஸ். மாப்பிள்ளை, அடக்கமான மாமியார், அழகான பங்களா, மோட்டார், சினிமா, டிராமா, பீச்சு-இப்படியெல்லாம் மனக்கோட்டை கட்டிக் கடைசியில் மண்ணாய்ப் போகிறார்களாம். எனக்கென்னவோ, இவையெல்லாம் உண்மை என்று தோன்றவில்லை. ஆனால் ஒரேயடியாக கனவே காணக்கூடாது என்ற பெரிய பயமுறுத்தலுடன் தம் கட்டுரையை முடிக்கிறாரே அந்த அம்மாள், அதுதான் முடியாது. அந்த அம்மாளுக்கு வயசு அதிகம் இருக்கலாம்; தம்முடைய இளமை மறந்து போயிருக்கலாம்; அல்லது குழந்தை குட்டிகள், குடும்பத் தொல்லைகள் பிடுங்கி எடுக்கலாம். அதனால்தான் 'சந்நியாசியைப் போல் இரு' என்று உபதேசம் செய்யத் தொடங்கி விட்டார். இது யாராலுமே ஆகாதே! வாழ்க்கையில் துரதிருஷ்ட சாலிகளின் நியாய போதனை யாருக்குத் தேவை? இளமையைக் கொடுத்த கடவுள் அதனுடன் அதற்கேற்ற உல்லாசமான மனத்தையும் தெரியாமலா கொடுத்திருக்கிறார்?

எனக்கு ஐ.சி.எஸ். காரனும் அவனுடைய அதிகாரக் கோட்டையான பங்களாவும் வேண்டாம். மானமுள்ள தொழிலில் போதுமான வருமானமுள்ள ஒரு நல்ல இளைஞன் போதும். என்னைப் புரிந்துக்கொள்ளக் கூடியவனாக, தன்னை முழுக்கப் புரிந்துகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் அளிப்பவனாக இருக்க வேண்டும். இருவர் இருதயத்திலும் மற்றவர் தாராளமாய்ச்

செல்லவேண்டும். அதன் ஒரு சில அறைகூட மற்றவருக்கு மூடியிருக்கக் கூடாது.

சிறிய வீடானாலும் நான் சுத்தமாய் வைத்துக்கொள்வேன். 'படித்த பெண்ணுக்குச் சமைக்கத் தெரியாது' என்ற அவச் சொல்லுக்கு என்னிடம் இடம் இல்லை. ஒரே வாக்கியத்தில் சொல்லுகிறேன்; என்னைச் சந்தோஷமாய் வைத்துக்கொள்ளத் தெரிந்தவனை என்றென்றும் நான் சந்தோஷத்தோடு வைத்திருப்பேன். அன்பைக் கொடுக்கும் அவனுக்கு அனைத்தையும் வழங்குவேன்.

இந்த விவகாரமெல்லாம் இப்போது எதற்கு என்று கேட்கிறீர்களா? வருகிற இண்டர் பரீட்சை முடிந்தவுடன் எனக்குக் கல்யாணமாம்! அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. மாப்பிள்ளையின் போட்டோ, அவரைப் பற்றிய விவரம் எல்லாம் அனுப்பியிருக்கிறார். பெயர் முருகேசனாம். படத்தில் நன்றாகத்தான் இருக்கிறார். பள்ளிக்கூடத்து வாலிபர்கள் சிலருக்கு எங்களைப் பார்க்கும்போது இயற்கையாக ஒரு விறைப்பு வந்து விடுகிறதே, அந்தப் பாவனைதான் படத்திலும் இருக்கிறது. சட்டையின் 'கால'ரைத் தூக்கி விட்டுக்கொண்டு ஒரு மாதிரியாக விழிக்கிறார். இன்ஜினியரிங் காலேஜில் படித்து விட்டு இப்போதுதான் வேலையில் அமர்ந்திருக்கிறாராம். ஆரம்பத்தில் நூற்றைம்பது சம்பளம்; பின்னால் அதிகமாகலாம்.

இந்த விஷயமெல்லாம் காந்தத்திற்கும் மற்றவர்களுக்கும் தெரியாது. தெரிந்தால் இந்த ஹாஸ்டல் முழுவதும் தம்பட்டம் அடித்து விடுவார்கள். அப்புறம் பரீட்சைக்குப் படிப்பதுகூடச் சிரமம். லீவுக்குப் புறப்படுகையில் எல்லோர் விலாசமும், ஆம், முக்கியமாகப் பாலுவின் விலாசமும், வாங்கிக்கொண்டு போக வேண்டும். பத்திரிகை அனுப்பவேண்டாமா?

ஆ! பாலு! பாலுவின் ஞாபகம் ஏன் இப்போது வருகிறது?

நாழிகையாகிறது - என்ன? இந்தப் பாட்டு இந்த வேளைக்குப் பொருத்தமான பாட்டுத்தான். சுத்தானந்த பாரதியார் அதிகம் எழுதிருக்கிறார். அவரது சிறந்த கவிதைகளில் இது ஒன்று:

**இன்பக் கனவிந்த வையம் - அதில்**

**எங்கும் கலைவெள்ளம் பொங்குதை யேக்ஞயில்**

அன்பென் றகவுது கேளாய் - நெஞ்சில்

ஆசைகொண் டாடுதோர் பொன்மயிலே...

ஆமாம்; இன்பமான கனவுதான் உலகம். மிக மிக இன்பமானது. மழை நின்றுபோன இந்தச் சமயம் தூரத்துக் காட்டில் எங்காவது பூங்குயில் ஒன்று கூவிக் கொண்டு தன் துணைவியை நாடிப் பறக்கும். நெஞ்சை ஆசைக்கு அடிமைப்படுத்திய ஆண் மயிலும் தன் வண்ணக் கலாபத்தை விரித்து ஆடிப் பேடையை மகிழ்விக்கும்... என்ன சத்தம்! ஐயோ! அடுத்த அறையில் கூடியிருந்த பெண் மயில்கள் தங்கள் இனிய குரலில் பாடிக்கொண்டு இந்த அறையை நோக்கிப் படையெடுத்து முன்னேறுகின்றனவே!

## 2

### பாலசந்திரன்:

கல்லூரி மூடும் நாள் நெருங்கிவிட்டது. சங்கத்து அறையில் உட்கார்ந்து ஆண்டு விழாவுக்கு ஏற்பாடு செய்வதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். பின்புறத்துக் கதவுகளின் வழியாக மல்லிகை மணம் 'கம்' மென்று உள்ளே பாய்ந்தது. ஆண்டு விழா நினைவு தடைப்பட்டு மல்லிகையுடன் மனம் மிதக்க ஆரம்பித்தது. மல்லிகை என்றால் எனக்கு அலாதிப் பிரியம். வருஷம் முழுவதும் ஏன் மல்லிகை பூத்துச் சொரியக்கூடாது? குறிப்பிட்ட சில மாதங்களை மட்டும் ஏன் அது தேர்ந்தெடுத்துக் கொள்கிறது என்று எனக்குத் தோன்றும். அந்தச் சில மாதங்களையாவது நம்முடைய கல்லூரி மாணவிகள் சரியாகப் பயன்படுத்திக் கொள்கிறார்களா? தூய வெள்ளையின் மணங்கமழும் அழகு அவர்களில் அநேகம் பேருக்கு ஒத்துக் கொள்ளுவதில்லை. என்னவோ பெயர் தெரியாத செடியையும் கொடியையும் கிள்ளித் தலையில் வைத்துக்கொண்டு வந்து விடுகிறார்கள். ஆனால் கல்யாணி இதற்கு விலக்கு.

சுகந்தத்தில் ஆழ்ந்த நான், அது வந்த திசையை நோக்கக்கூட மறந்துவிட்டேன். ''வரலாமா?'' என்ற பழக்கப்பட்ட மென்குரல் அந்த மணத்தோடு வந்து என் செவிகளில் மோதியது. ''வாருங்கள். அனுமதி கேட்காமலேயே வரலாம்'' என்று நாற்காலியை இழுத்துப் போட்டேன். இயல்பான புன்சிரிப்போடு பெண்கள் சங்கத்தின் காரியதரிசி கல்யாணி வந்து உட்கார்ந்தாள். இருவரும் வரப்போகும் ஆண்டு விழாவைப்பற்றி விரிவாகப் பேசினோம்.

''இந்தக் கல்லூரிப் படிப்பில், இந்த மாதிரிச் சங்கம் ஒன்று இல்லாவிட்டால்...'' என்று நிறுத்தினேன்.

''படிப்புக்கு அர்த்தமே இருந்திருக்காது. பொது அறிவுக்கும் நமக்கும் வெகுதூரமாயிருக்கும். நாம் வேண்டாத ஒன்றை நம் மூளையில் ஏற்றப் பாடுபடுகிறது கல்லூரி. அதிலிருந்து கொஞ்சம் விடுதலை பெற்று இந்தச் சங்கத்தின் மூலம் உண்மையைப் பார்க்கிறோம். ஆனால்...பாலு...''

கல்யாணி எதையோ சொல்ல வெட்கப்பட்டாள். ஆனால் மறுகணம் அதைச் சொல்லிவிட்டாள்.

''இந்த மாதிரிக் கழகங்களும் சங்கங்களும் அநேகம் கல்வி நிலையங்களில் இருக்கத்தான் இருக்கின்றன. பெரும்பாலும் கட்டுப்பாடற்ற கேலிக்கூத்துக்கள்தாம் அவற்றால் ஏற்படும் பலன். எங்காவது சரியாக நடந்தால் அங்கு மாணவ மாணவிகளின் ஆதரவு இராது. இங்கே உங்களுடைய உழைப்பினால்தான் இவ்வளவு முன்னேறி இருக்கிறது சங்கம். எல்லோரும் ஒற்றுமையாய் இருந்து இப்படி வெற்றி பெற நடத்துவது இங்குள்ள ஆசிரியர்களுக்கே ஆச்சரியமாயிருக்கிறது.''

கல்யாணி தன் இருதய பூர்வமாகச் சொன்ன மொழிகளை நன்றியோடு ஏற்றுக்கொண்டேன். ஆனால் கல்யாணி மட்டிலும் என்ன? கல்யாணிபோல் ஒவ்வொரு பெண்ணுமே இருந்து விட்டால்...!

பல நிமிஷநேரம் சுவாரசியமாய்ப் பேசிக்கொண்டிருந்து விட்டுக் கல்யாணி கிளம்பினாள். அவள் விட்டுச் சென்ற மலர் மணம் இன்னும் அறையைச் சூழ்ந்து கொண்டிருந்தது. கல்யாணி என்னை அறிந்துகொண்டிருக்கிறாளா? இந்தச் சில நாட்களாய் என் உள்ளத்தில் ஏற்படும் மாறுதல்களை அவளால் கண்டுகொள்ள முடிகிறதா? வேண்டவே வேண்டாம். அவள் தெரிந்து கொள்ள வேண்டாம். அதனால் அவளுக்கும் பிரயோசனம் இல்லை; எனக்கும் பயன் இல்லை. மனசில் ஏற்படும் சின்னஞ்சிறு அழகிய சலனங்களுக்கும் ஓர் அபூர்வ சக்தி இருக்கிறது. அவை சாதாரணமாக வெளியில் தெரிவதில்லை. வெளிக்குத் தெரியாத இன்ப ரகசியமாய்க் காப்பாற்றப்படும் இந்தச் சக்தியை நான் பாராட்டுகிறேன்.

சித்தத்தின் சிகரத்திலே கம்பீரமாய் வீற்றிருந்த தீர்மானம் - சமீபத்தில் கல்யாணமே செய்துகொள்வதில்லை என்ற வைராக்கியம்

- ஏன் இப்படித் தன் இடத்தைவிட்டு மெதுவாகக் கீழே ஒவ்வொரு படியாய் இறங்கி வருகிறது? காரணம், கல்யாணி...எப்படி யெல்லாம் ஒரு பெண் இருக்க வேண்டுமென்று நான் கற்பனை செய்கிறேனோ அப்படியெல்லாம் இருக்கிறாளே கல்யாணி!

கல்யாணி! நீ எப்போதும்போல்தான் இருக்கிறாய். இல்லை; அப்படியும் சொல்ல முடியாது. உன்னை யார் கண்டார்கள்? உனக்கும் என்னுடைய நெஞ்சத்தைப் போல் ஒரு நெஞ்சும், அதற்குள்ளே பூட்டி வைப்பதற்கென்று ரகசியமும் இருக்கும் அல்லவா? உன் உருவத்தில் அழகு சொட்டுகிறது; உன் பேச்சு, உன் பார்வை, உன் குணம், உன் அறிவு - ஏன், அனைத்திலும் அழகு கமழ்கிறது. ஆடம்பரம் இல்லாத உடை, அடக்கமும் கண்ணியமும் நிறைந்த சுபாவம், கடுமையான உழைப்பு, பரந்த நோக்கம்.. பூரணமான பெண் - நீ

உன்னுடைய அந்தப் பெண்மை நிறைவுதான் என்னுடைய வைராக்கியத்தைக் கரம் கொடுத்து அழைக்கிறது. நிறைவு மாத்திரமா! ஹூம்! சமீபத்தில் ஏற்பட இருக்கும் பிரிவு - அடுத்த வருஷத்திலிருந்து நீ படிப்பதற்கில்லையென்று சொல்லி விட்டாய். அநேகமாக நானும் அப்படித்தான். பிறகு நாம் எப்போது, எந்தச் சந்தர்ப்பத்தில் சந்திக்கிறோமோ? ஒரு வேளை சந்திக்காமலேயே இருந்துவிடலாம். பெண்ணின் வாழ்வை நம் நாட்டு அடுப்பங்கரை இருட்டறை விழுங்கும்போது நீ மட்டிலும் அதிலிருந்து எப்படித் தப்ப முடியும்! - ஆம், எனக்கு ஏன் இந்த நினைவெல்லாம்!

வாழ்வில் எத்தனையோ பேர்களைச் சந்திக்கிறோம். எத்தனையோ பேர்களைப் பிரிகிறோம். எல்லோரையும் என்றாவது ஒருநாள் பிரியத்தான் பிரிகிறோம். பிரிவு ஒன்றுதான் நிச்சயமானது. ஆனால் சில பேருடைய பிரிவுக்காக மட்டிலும் ஏன் இப்படி மனம் ஏங்குகிறது? கல்யாணியைப் பிரியப்போகும் நினைவுபோல் ஒன்றுமே இதுவரை எனக்கு இவ்வளவு வருத்தம் நிரம்பியதாக இருந்ததில்லை.

ஆண்டு விழாவெல்லாம் ஒருவிதமாக முடிந்தது; நண்பர்களின் பாராட்டு, மகிழ்ச்சிக்குரிய விஷயந்தான். ஆனால் கல்யாணி கூறிய புகழ் மொழிகள் இன்னும் என் செவியில் ரீங்காரம் செய்து கொண்டே இருக்கின்றன.

கடைசிப் பரீட்சையை முடித்து வெளியே வந்தேன். வெளி உலகம் சுடுகாடுபோல் இருந்தது. சூன்யமான ஒரு பெருவெளியில்

தனியே விடப்பட்டதுபோல், கல்லூரிப் படிக்கட்டில் நின்று கொண்டு எதிரே வெறித்துப் பார்த்தேன். என் கண்களுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. அவை பார்வை இழந்துவிட்டனவா?

''பரீட்சை நன்றாக எழுதி இருக்கிறீர்களா?''

திரும்பிப் பார்த்தேன். கல்யாணி புன்முறுவலோடு நின்று கொண்டிருந்தாள்.

''நன்றாக எழுதி இருக்கிறேன். தாங்கள்?''

''நானும் நன்றாக எழுதி இருக்கிறேன். உங்களுக்கு வெற்றி கிடைக்க வேண்டும்.''

''உங்களுக்கு என்ன? நமக்கு என்று சொல்லுங்கள். உங்களுக்குத்தான் முதல் வகுப்பு நிச்சயமாயிற்றே!''

வெட்கத்தோடு கல்யாணி தலை குனிந்து கொண்டாள். சில நாட்களாக எனக்கு ஏற்பட்டிருக்கும் தவிப்பை அவள் அறிந்து கொண்டிருக்க முடியாதென்றே மீண்டும் எண்ணுகிறேன். அவள் நெஞ்சும் அப்படித்தான் இருக்கவேண்டும். எல்லை காணமுடியாத ஆழம் நிறைந்த மனத்தவள் கல்யாணி. இந்த இரண்டு வருஷங்களில் மிகவும் நெருங்கிப் பழகி இருக்கிறாள். தாராளமாக நடந்து கொண்டிருக்கிறாள். ஆனால்? அவள் பெண், அதை எந்தக் கணத்திலும் நிரூபித்துக் கொண்டே இருக்கிறாள்.

''என்றைக்கு ஊருக்குப் புறப்படப் போகிறீர்கள்?''

''நாளைக்குப் போகலாம் என்றிருக்கிறேன்.''

''அப்படியானால் நாளைக்கு மத்தியான்னச் சாப்பாட்டை எங்கள் வீட்டில் வைத்துக் கொள்ளுகிறீர்களா?''

கல்யாணி கண்களைத் திறந்து என்னை நோக்கினாள். ''மத்தியான்னமா? சரி; காலையில் போகலாம் என்றிருந்தேன்-சாயங்காலம் புறப்பட்டால் போகிறது.''

''காலையில் அவசியம் புறப்படவேண்டுமென்றால்...''

''இல்லை, இல்லை; மெதுவாய்ப் புறப்படலாம். உங்கள் வீட்டுச் சாப்பாட்டை எனக்கு வேறு எப்போது போடப் போகிறீர்கள்? அவசியம் வருகிறேன். உங்கள் அம்மாவையும் பார்த்ததுபோல் இருக்கும்.''

அன்றைக்கு ராத்திரிப் பொழுது எனக்குப் பகலாய்க் கழிந்தது. உறக்கமே இல்லை. கல்யாணி! கல்யாணி! கல்யாணி! சித்தம் உறுமியது; நெஞ்சு கெஞ்சியது. இனி இருப்பது ஒரே நாள்தான். அந்த ஒரே நாளில் அவள் உள்ளம் அறிந்து ஆகவேண்டிய காரியங்களைச் செய்யலாம். அம்மாவுக்கு இதில் தடையே இராது; கல்யாணமே வேண்டாம் என்றவன் போக்கு இப்படி மாறியதில் எல்லையில்லா ஆனந்தம் அடைவார்கள். ஆனால் என் நோக்கம்? கனவு? வைராக்கியம்?

அளவுக்கு அதிகமாக உள்ள பணத்தைக் கொண்டு தீவிரமான சேவா மார்க்கத்தில் இறங்கத் துணிந்ததெல்லாம் வீணாகிவிடுமே! இளமையின் ஆரம்பத்திலேயே காதலுக்கு இடம் கொடுத்து விட்டால், அப்புறம் மற்றோருக்குத் தொண்டு செய்ய எங்கே நேரம் இருக்கும்? தமிழ்நாட்டுக் கிராமங்கள் அறியாமையை வளர்க்கும் களர் நிலமாய், செல்வமற்ற பாழ்வெளியாய், சோம்பலின் உறைவிடமாய் இருக்கின்றன. இவற்றின் தலைவிதியை முடிந்தவரை மாற்றி அமைக்க விரும்பிய நாம் சொந்த சுகத்திற்கு இடம் கொடுக்கலாமா? முதலில் காதல், பிறகு கல்யாணம், கடைசியில் குழந்தை குட்டிகள், குடும்பம் - இந்தக் குட்டி உலகம் எங்கே? வெளி உலகச் சேவை எங்கே?

பொழுது விடிந்தது. மனசும் களங்கம் நீங்கித் தெளிவடைந்தது. நான் என் போக்கில்தான் இப்போதைக்குச் சொல்லப் போகிறேன். என் கனவுகளில் ஓரளவாவது முதலில் நிறைவேறிவிட்டால், இன்னும் பத்துப் பன்னிரண்டு வருஷங்களில் கல்யாணம் செய்து கொள்வேன். கல்யாணியைப் போன்ற ஒரு பெண் அப்போது எனக்குத் துணையாகக் கிடைத்தாளானால் நான் பாக்கியம் செய்தவன்.

என் தாய்க்குக் கல்யாணியின் வரவைச் சொல்லியிருந்தேன். இதைக் கேட்டவுடன் தமக்குள் என்ன நினைத்துக் கொண்டார்களோ தெரியவில்லை. அதிக உற்சாகத்துடன் தாமே ஆக வேண்டிய காரியங்களையெல்லாம் நேரில் பார்க்கத் தொடங்கினார்கள். தோட்டக்காரனை எல்லா மல்லிகையையும் எடுக்கச் சொல்லி, பூத்தொடுத்து, இரண்டு பெரிய மல்லிகைப் பந்துகொண்டு வந்து வைத்தார்கள்.

''இரண்டையும் படங்களுக்குப் போட்டு விடாதே; ஒரு பந்து வரப்போகிற உன் சிநேகிதிக்கு வைத்திரு'' என்று சொல்லும்போது

அவர்கள் முகத்தில் மலர்ந்த மகிழ்ச்சியை என்னால் கண்டு கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

''ஒரு பந்துப் பூவா? அடேயப்பா! ஒரே பூ மரமாகி விடும்மம்மா! இதைச் சுமந்துகொண்டு கல்யாணி ஊர் போய்ச் சேர வேண்டுமே!'' என்றேன் கேலியாய்.

''எதைச் சுமந்துகொண்டு போகவேண்டும்?'' என்று கேட்டுக்கொண்டே கல்யாணி வந்து இருவருக்கும் வணக்கம் தெரிவித்துவிட்டு நாற்காலியில் அமர்ந்தாள்.

''சுமக்க வேண்டிய பொருள் இந்தப் பூ - இடம் உங்கள் அழகிய கேசம்!'' என்று எடுத்து எதிரே வைத்தேன்.

''தலை நிறையப் பூ வைத்துக் கொண்டால் அழகாயிராதா, கல்யாணி! இந்தக் காலத்துப் பிள்ளைகளே இப்படித்தான். எதில் தாராளமாக இருக்க வேண்டுமோ அதில் அதிகக் கட்டுச் செட்டாய் இருப்பது; கட்டுச் செட்டாய் இருக்க வேண்டியதில் கண் தெரியாமல் நடந்துகொள்வது'' என்று அம்மா குறுக்கிட்டார்.

''இந்தக் காலத்துப் பிள்ளைகளை வேண்டுமானால் சொல்லுங் கள். ஆனால் பெண்கள் அப்படி இல்லை'' என்றாள் கல்யாணி.

''பிள்ளைகளைவிடப் பெண்களே மோசம். ஆனால் கல்யாணி அப்படி இல்லை'' என்றேன் நான்.

இதற்குள் கல்யாணி ஒரு பந்து மல்லிகையையும் பிரித்து அப்படியே தலையில் வைத்துக் கொண்டாள். அம்மாவுக்குச் சந் தோஷம் தாங்க முடியவில்லை. ''இப்போது லட்சுமிதேவி மாதிரி இல்லை? - இந்த மாதிரிப் பெண் இருக்கிறதை நீ முன்பே சொல்லியிருந்தால் தினம் இவ்வளவு பூ அனுப்பியிருக்கலாமே!'' என்றார்.

''தாராளமாய் அனுப்பி இருக்கலாம்; ஆனால் இன்றைக்குக் கல்யாணிக்கு உள்ள தைரியத்திற்குக் காரணம் வேறே. கல்லூரிதான் கிடையாது. இத்தனை பூவையும் வைத்துக்கொண்டு அவள் வகுப்பில் நுழைவதாய் இருந்தால், அப்போதல்லவோ அவள் துணிவை மெச்ச வேண்டும்!'' என்றேன்.

கல்யாணியின் முகம் நாணத்தால் சிவந்தது.

அம்மா கல்யாணியுடன் பெரும் பொழுதைப் பகிர்ந்து கொண்டார்கள். வீடு முழுவதும் சுற்றிக் காண்பித்து, தோட்டத்திற்கு

அழைத்துச் சென்று என்ன என்னவோ பேசிக் கொண்டிருந்தார்கள். இந்தச் சில மணி நேரங்களில் கல்யாணியின் குடும்ப விவரம் முழுதும் அம்மாவுக்குத் தெரிந்திருக்கும்; அதேபோல் தம் கதை முழுவதையும் அவளிடம் சொல்லியிருப்பார்கள். பல ஆண்டுகளா னாலும் ஆண்களால் தெரிந்துகொள்ள முடியாத மற்றவரின் குடும்ப ரகசியங்கள், இரு பெண்களின் சேர்க்கையில் சில நிமிஷங்களில் அம்பலத்துக்கு வந்து விடுகின்றன.

சாப்பாட்டின்போது எங்கள் இருவரையும் ஒன்றாய் வைத்துப் பரிமாறினார் அம்மா. அதனோடு தம்முடைய குறையையும் நாசூக்காகக் கல்யாணியிடம் தெரிவித்துக் கொண்டார். ''கல்யாணி, உன்னைப்போல் ஒரு பெண் இந்த வீட்டில் இல்லாமல் எப்படி வெறிச்சென்றிருக்கிறது தெரியுமா? பாலுவிடம் சொல்லாத நாள் கிடையாது'' என்றார். இந்தப் போக்கில் அவர்களை விட்டுக் கொண்ட போனால் நிலைமை சங்கடத்திற்கு இடமாகி விடும் என்று அறிந்து, ''போதும், அம்மா! சந்தோஷமாய் ஒரு வேளை சாப்பிட்டுப் போக வந்த கல்யாணியை என்ன என்னவோ சொல்லிக் கஷ்டப்படுத்துகிறீர்களே!'' என்றேன். ஆனால் உண்மையில் கல்யாணி அம்மாவின் இந்தப் பேச்சை அக்கரையோடு கவனித்தாள். - ஏன்?

பிற்பகலில் பேச்சின்போது கல்யாணி, ''உங்களைப் பற்றி இன்றுதான் சரியாகத் தெரிந்து கொண்டேன். ஜமீன்தாரின் குமார ராயிருந்தும் இவ்வளவு நல்லவர்களாக இருக்கிறீர்களே! உங்களுடைய தாய் மாத்திரம் என்ன? செல்வச்செருக்குக் கொஞ்ச மும் இல்லாமல் நடந்து கொள்ளும் பணக்காரக் குடும்பம் நம் நாட்டில் மிகவும் அபூர்வம்'' என்றாள்.

கல்யாணி விடைபெற்றுச் செல்லும் காட்சி என் நெஞ்சை உருக்கிவிட்டது. எத்தனையோ வருஷங்களாய்க் குடும்பத்தில் இருந்தவளைப் பிரிவதுபோல் அம்மா நடந்து கொண்டார்கள். நான் படிக்கட்டில் நின்று, அவளைக் கொண்டு செல்லும் என் வீட்டு வண்டி தெருவில் மறையும் மட்டும் பார்த்துக் கொண்டிருந்தேன். அவளை இனிக் காண்பேனா? அவளுக்காக என் மனத்தில் பொங்கும் அன்பை என்ன பெயர் சொல்லி அழைப்பேன்!

# 3

## முருகேசன்

கல்யாணமாம் கல்யாணம்! யாருக்கு வேண்டியிருக்கிறது இந்தக் கல்யாணமெல்லாம்? இரண்டு வருஷங்களாக அப்பாவின் தொந்தரவு பொறுக்க முடியவில்லை. கிராமத்தில் இருப்பவர், தள்ளாத வயசில் சிவனே என்று நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டு கோயில் குளங்களில் விழுந்து கிடப்பாரா? நம்மைப்பற்றி இனிமேல் இவருக்கு என்ன கவலை? தம்பி ஒருவன் இருக்கிறானே, அவனுக்கும் வயசாகிவிட்டதே என்கிறார். ஆனால் என்ன? அவனுக்கு முதலில் கல்யாணம் பண்ணுகிறதுதானே? நானா வேண்டாம் என்கிறேன்?

போதாக்குறைக்கு, ''நீ நாளுக்கு நாள் கெட்டுக் குட்டிசுவராய்ப் போய்க் கொண்டிருக்கிற சேதி இங்கெல்லாம் நாள் தவறாமல் வந்து தொலைக்கிறது. எங்களால் வெளியே தலைகாட்ட முடியவில்லை. உன்னைப் பெற்றதனால் நான் வாங்கிக்கொண்ட பலன் போதும். கடனுக்குப் படிக்க வைத்துவிட்டேன்; வேலையும் வாங்கிக் கொடுத்துவிட்டேன்; கடைசிக் கடனாகக் கல்யாணமும் பண்ணி உன்னைத் தலைமுழுகி விடுகிறேன்'' என்று வெறுப்பாக வேறு எழுதியிருக்கிறார்.

அப்பாவின் கடுதாசுக் கட்டுகள் கிடக்கட்டும். மனிதனுக்குக் கல்யாணம் என்பது அவசியந்தானா என்னும் பிரச்னையையே இன்னும் நான் ஆராயவில்லை. அதையெல்லாம் உட்கார்ந்து யோசிக்க எங்கே நேரம் இருக்கிறது? கல்லூரியை விட்டுச் சரியாக ஒரு வருஷம் ஆகவில்லை. அதற்குள் எவனுக்கோ நூற்றைம்பது ரூபாய் சம்பளத்துக்குக் கைகட்டிச் சேவகம் பண்ண வேண்டியிருக் கிறது. இந்தச் செலவு நமக்குப் போதவே இல்லை. மேற்கொண்டு கேட்டால் அப்பா சீறி விழுகிறார். கல்யாண உபதேசத்தில் இறங்கி விடுகிறார். ஒருவனுக்கே போதாத பணம், இரண்டு பேருக்கும் அப் போது சரியாகப் போய்விடுமாம். வரப்போகும் மருமகள் உன்னைப் போல் ஊதாரியாய் இருக்கமாட்டாள். செட்டாய்க் குடித்தனம் பண்ணினால் அதில் மீதங்கூட இருக்கும்'' என்று எவளோ வரப் போகிற ஒருத்திக்கு இப்போதே பரிந்து பேசுகிறார்.

நேற்று இரவு வெகு நேரம் சுந்தரியின் வீட்டில் கழிந்து விட்டது. என்னுடைய கல்யாணப் பேச்சைப் பற்றித்தான் சுந்தரியும்

சொல்லிக் கேலி செய்து கொண்டிருந்தாள். ''ஏன் ஸார், எப்போது கல்யாணம் செய்துகொள்ளப் போகிறீர்கள்? அடிக்கடி உங்கள் அப்பா பயமுறுத்திக்கொண்டே இருக்கிறாராமே!... ஏன், தைரியமாகச் சொல்வதுதானே? 'நான் இங்கே ஏற்கனவே ஒருத்தியைக் கல்யாணம் செய்துகொண்டுவிட்டேன்; இனி அடியோடு அந்த நினைப்பை மறந்து விடுங்கள்' என்று சொல்லத் துணிவு இல்லையா? இல்லை, மனம் இல்லையா?'' என்றாள்.

சுந்தரி!

அவள் அழகிலே இருக்கும் மோகன லாகிரியை நான் வேறெங்கும் கண்டதில்லை. பார்த்த நிமிஷத்திலேயே என்னை வெற்றிகொண்ட லாகிரி அது. வெறிகொள்ளச் செய்யும் மயக்கு. அவளை விட்டுவிட்டு வேறு ஒருத்தியா? ஆனால்...ஆனால்... சுந்தரி யாருக்குச் சொந்தம்? எனக்கா, ஜம்புவுக்கா? அல்லது இருவருக்குமா?...சே! அநாவசியமான இந்தச் சங்கடங்கள் நமக்கு எதற்கு? நம்மை நாமே வெறுக்கச் செய்கின்றன இந்த நினைவுகள்...

ஒரு புறம் யோசித்தால், நமக்கென்றே முழுதும் ஒருத்தி தேவையாயிருக்கிறது. அப்படி ஒன்றும் இப்படி ஒன்றுமாக இருப்பதில் தான் என்ன குடி முழுகிப் போகிறது? ஆனால் குரங்கைப்போல் ஒருத்தி வந்து சேர்ந்தால், அதைச் சகிக்க முடியாது என்னால்.

இன்றைத் தபாலை இன்னும் பிரிக்கவில்லை. அப்பாவிடமிருந்துதான் வந்திருக்கிறது. வழக்கம் போலத்தான் எழுதியிருப்பார் - அட! போட்டோ ஒன்று இருக்கிறதே! பெண்! அழகான சுருண்ட தலைமயிர் நெற்றியை வளைத்து அழகு செய்கிறது. படத்தில் இருப்பது போலவே நேரிலும் இருந்தால் அழகிதான். இவள் அழகில் மயக்கம் இல்லை. இந்தப் படத்தைப் பார்த்தால் ஏதோ பகற் கனவின் இன்பம் வருகிறது. நான் அநுபவித்தறியாத சில கற்பனைகளை இந்தப் படம் தூண்டுகிறது. இந்த மாதிரி அழகிகளைச் சந்திப்பது மிகவும் அபூர்வம். நானுந்தான் பல பெண்களைப் பார்த்திருக்கிறேன். என்றாலும் இவள்...

பெயர் கல்யாணியாம். இண்டர் பரீட்சை எழுதிக் கொண்டிருக்கிறாளாம். நன்றாகப் பாடத் தெரியுமாம். நல்ல குடும்பம். சுமாரான சொத்து. இன்னும் இதைப் போன்ற சம்பிரதாயச் செய்திகளை ராமாயணமாக வாரி வழங்கியிருக்கிறார் அப்பா. சொல்லப் போனால் இதில் ஒரு படி அதிகமாகவே போய்விட்டார். தாமே

போய்ப் பேசி இடத்தை நிச்சயப்படுத்தி விட்டாராம்! இதற்கு நான் சம்மதிக்காவிட்டால் இனி அந்தப் பக்கம் தலைகாட்ட வேண்டிய அவசியமே இல்லையாம். பிறந்த இடத்தையே மறந்து விடும்படி எழுதியிருக்கிறார்.

தகப்பனாரின் பயமுறுத்தல்களுக்குப் பயந்த காலம் மலை ஏறிவிட்டது. இனியும் அவர் என்னிடம் அந்த மாதிரிப் பணிவை எதிர்பார்க்கக்கூடாது. என்றாலும், படத்தில் இருப்பதுபோன்ற அழகி நமக்குக் கிடைக்கப் போகிறாள் என்றால், இந்த அருமையான சந்தர்ப்பத்தை நழுவ விடுவானேன்? தானாக வரும் இந்தச் சௌந்தரியதேவியைத் தள்ளிவிட யாருக்குத்தான் மனம் வரும்? ஆனால், படத்தைப் பார்த்து மட்டிலும் சம்மதம் தெரிவிப்பது முட்டாள் தனம். நேரில் சென்று பார்க்க வேண்டும். படம் உண்மையாக இருந்தால் அவள் என்னுடையவள். இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது, பழைய பதில். அவளுக்கும் என் தகப்பனாருக்குமாக சேர்ந்து ஒரு பெரிய முழுக்குப் போட்டுவிட்டுக் கிளம்புகிறது. சுந்தரி எங்கே போய்விடப் போகிறாள்?!



நல்ல காலமாகத் தமிழ் நாட்டில் பெண்ணுக்கு முகத்திரை போட்டு மூடி வைக்கிற கெட்ட பழக்கம் இல்லை. ஆனால் விலக்கப்பட்ட முகத்திரைக்குப் பின் அதிரூப சுந்தர முகம் ஒன்று தெரியுமானால் அது தனி அழகுள்ள காட்சிதான். கதவைச் சற்றுத் திறந்து கொண்டு, தங்கள் மெல்லுடல் முழுவதும் கதவுக்குப்பின் மறைய, வண்ண முகங்காட்டி மறைக்கும் மங்கையரைக் காணும் போது எனக்கு மேற்கண்ட திரைமுகத்தின் நினைவுதான் வரும்.

பெண்ணைப் பார்க்க நாங்கள் ஊருக்குச் சென்ற போது முதலில் வந்து கதவைத் திறந்தவள் கல்யாணிதான். நான் முன்னால் கூறிய்துபோல் பாதி திறந்த கதவின் வழியே அழகு வெள்ளம் பொங்கிப் பாய்ந்தது. நான் அயர்ந்து விட்டேன்; உருவத்தை அப்படியே பிரதிபலிப்பதற்குப் போட்டோதான் சிறந்த சாதன மென்று யார் சொன்னாலும் என்னால் நம்பமுடியாது. ஜீவன் துடிக்கும் இந்த உயிரோவியம் எங்கே? கறுப்பும் வெண்மையும் கலந்து உருவாகிய அந்தக் காகிதப் படம் எங்கே? படத்தில் இருந்ததுபோல் அவள் இல்லை; எண்ணற்ற மடங்கு அதைவிட அதிகமான எழிலுடன் இருந்தாள்.

என்னுடைய அழகு ஆராய்ச்சிக்காக அவள் அங்கே கண நேரங்கூடத் தாமதிக்கவில்லை. மின்னலைப் போல் நெளிந்து சமீபத்து அறைக்குள் மறைந்தாள்.

அப்பாவும் பெண்ணின் தகப்பனாரும் பலப் பல விஷயங் களைப் பேசிக்கொண்டார்கள். என் கவனம் அங்கே இல்லை. அது, அவள் என்னைச் சந்தித்துவிட்டு அறைக்குள் நுழைந்து கொண்டாளே! அந்த அறையில் தானும் நுழைந்து கொண்டது. எங்களைப் பார்த்ததில் அவள் அதிக வெட்கம் அடைந்தவளாய்க் காட்டிக் கொள்ளவில்லை. இன்னார் என்று குறிப்பறிந்து கொண்ட வளாக மட்டிலும் தெரிந்தது.

அப்பா அந்த இடத்தில் மிகவும் மரியாதையாகவே நடந்துகொண்டார். ''பையனை உங்களுக்குப் பார்க்க வேண்டும் என்கிற பிரியம் இருக்குமல்லவா? அதுவும் அல்லாமல் பையனுக் கும் பெண்ணுக்கும் கல்யாணத்திற்கு முன்பு அறிமுகமாவது ஆகவேண்டும் என்பது என் எண்ணம். அதற்காகவே முருகேசனை அழைத்து வந்தேன்'' என்றார்.

''அம்மா, இங்கே வா! இவர்தாம் முருகேசன். இவர் முரு கேசனுடைய அப்பா'' என்று இருவரையும் அவளுக்குத் தெரியப் படுத்தினார் அவள் தந்தை. எங்களை ஒரு சிரிப்புடன் நமஸ் கரித்துக்கொண்டே எதிரில் இருந்த நாற்காலியில் ஒரு நிமிஷம் உட்கார்ந்திருந்தாள். அப்போது அந்த ஹால் முழுவதும் தனிச் சோபையுடன் விளங்குவதுபோல் எனக்குப் பட்டது.

காதிலே வர்ணக் கற்கள் இழைத்த சிறிய ஜிமிக்கி. ஒரு நீண்ட கழுத்துச் சங்கிலி, இரண்டு மூன்று வளையல்கள் - இவைதாம் அவளுடைய முக்கிய நகைகள். ரோஜா நிற வாயில் புடவையும் அதே துணியில் ஜாக்கெட்டும் அணிந்திருந்தாள். பின்புறச் சடை யில் மல்லிகை தளதளவென்று மணம் சிதறிக் கொண்டிருந்தது.

லேசாய்த் தலைநிமிர்ந்து தன் அகன்ற நீண்ட விழிகளால் ஒருமுறை பார்த்துவிட்டு முன்புறம் தொங்கிய தலைமயிர்ச் சுருளை அப்புறம் ஒதுக்கிவிட்டாள். இதற்குள் என் தகப்பனார், ''கல்யாணி வருஷத்துக்கு வருஷம் பரீட்சையில் முதல்; பள்ளிக்கூடத்தில் நிறையப் பரிசுகள் வாங்கியிருக்கிறாள்'' என்றார். இந்த வார்த்தை யை அவர் சொல்லியிருக்க வேண்டியதில்லை. எனக்குச் சுருக் கென்று மனத்தில் தைத்தது. நான் ஒவ்வொரு வகுப்பிலும் பல வருஷம்! அதைக் குத்திக் காண்பிக்க வேண்டிய இடம் இதுதானா?

இருக்கட்டும்; இந்த அறிவுச் சிரோமணி என்னுடைய வீட்டின் அடுப்பங்கரையில்தானே இனிப் பரீட்சை எழுதவேண்டும்? அதில் முதலில் தேறுகிறாளா பார்ப்போம்!

இந்த வார்த்தையை அப்பா சொன்னதற்கப்புறம் என்னவோ போல் இருந்தது. அங்கு அதிக நேரம் இருக்கப் பிடிக்கவில்லை. ஆனால் அதே சமயம் அவள் அழகு எனக்குச் சமாதானம் கூறிக் கொண்டும் இருந்தது. விரைவில் சாப்பாட்டை முடித்துக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டோம்.

நண்பர்கள் இங்கு என்னைக் கேலி செய்தனர். ''இரண்டு வருஷமாய்த் தகப்பனார் விரித்த வலையில் இப்போதுதான் விழுந்தான் முருகேசன்'' என்றான் ஜம்பு. ''இல்லை, அப்பா விரித்த வலை அல்ல; அந்த அம்மணி விரித்த கண் வலை!'' என்றான் ராமசாமி

சுந்தரி என்னோடு சரியாக முகங் கொடுத்துப் பேசவில்லை. அவளைச் சமாதானம் செய்வதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. இந்த விஷயத்தில் சுந்தரியின் போக்கு எனக்கு வியப் பாகவே இருக்கிறது. நான் கல்யாணம் செய்துகொள்வதற்காக இவ்வளவு சாகஸம் செய்கிறாளே! இவள் எனக்கே உரியவளா? எனக்கு முழுதும் சொந்தமானவளா? எந்த உரிமையின் மீது இவ்வளவு பிடிவாதம் செய்கிறாள்?

எனக்கு இதை நினைக்கையில் அதிகமான மனக் கலக்கம் ஏற்பட்டுவிட்டது. சுந்தரியின் அழகு! அந்த வெறி கொள்ளச் செய்யும் மோகன உருவம்! அப்புறம் கல்யாணியின் கனவுலகச் சௌந்தரியம் - இரண்டுக்குள் எதை விரும்புவது? எதை விலக்கு வது? எனக்கு அழகு வேண்டும்; எல்லாவிதமான அழகுகளையும் - அழகிகளையும் - நான் விரும்புகிறேன். என் மனசு வாய் திறந்து பேசுவதானால் இதைத்தான் கூசாது எல்லோரிடமும் சொல்லும்.

ஜம்பு சொன்னான்: ''முருகேசனுக்குக் கல்யாணமாவதில் ஒன்றும் குடி முழுகிப் போவதில்லை. ஒரு வேளைக்கு நல்ல விருந்துச் சாப்பாடு போடுவான். 'ஆசை அறுபது நாள்' என்கிற விஷயம் அவனளவில் பொய்யாகவா போய்விடும்? உன்னையும் என்னையும் விட்டு அவனால் எங்கும் போகமுடியாது, சுந்தரி'' என்றான், என் எதிரிலேயே சுந்தரியிடம்.

ஆமாம்; ஆசை எ பதும், காதல் என்பதும் என்ன? வாழ்க்கைக்கு எது தேவை ? எது தேவையில்லை - சே! முதலில்

இந்த விவகாரமெல்லாம் நமக்குத் தேவையில்லை. நமக்கு வேண்டியது அநுபவிக்க அழகு, அல்லது அழகுக் கூட்டம்.

# 4

## பாலசந்திரன்

பரீட்சை தேறியாகிவிட்டது. மேலே படிக்கலாமா, வேண்டாமா என்ற பிரச்னையே இனி இல்லை. வெள்ளைக்காரர்கள் வைத்திருக்கிற கல்வித் திட்டத்தின்படி ஒருவன் பணம் நிறைய இருந்தால் வயசு பூராவும் படித்துக் கொண்டே இருந்துவிட்டுச் சாகலாம். பலன் என்னவென்று கேட்டால் வயிற்றைத்தான் எரியும்.

நாட்டிற்குச் சுதந்திரம் வந்தவுடன் மேற்கொண்டு செய்வதற்கு ஆயிரம் ஆயிரம் வேலைகள் இருக்கின்றன. முதலில், வந்த சுதந்தரத்தைக் காப்பாற்ற வேண்டும்.

பழைய ராஜ பக்தர்களும், வெள்ளைத் தாசர்களும் இப்போது புதிய கதர் உடுத்துத் தேச பக்தர்களாக மாறுவார்கள். பட்டம் துறந்த தியாகிகளாக வேஷம் போட்டு, சுதந்திரத்தில் தனிப் பங்குகொள்ள முன் வருவார்கள். செல்வாக்கும் பணமும் படைத்த அந்தப் போலிக் கூட்டத்திடமிருந்து சுதந்தரம் காப்பாற்றப்பட வேண்டும். நாட்டு இளைஞர்களின் செங்குருதியைப் பாய்ச்சி வளர்த்த உரிமைப் பயிர் இந்தத் தன்னலப் பன்றிகளால் அழிந்து போக விடக்கூடாது.

தமிழ்நாடு என்றையும்விட இன்று அதிகமாகப் பிளவுபட்டிருக்கிறது. எண்ணற்ற கட்சிகள்; கட்சிகளுக்குள் வேற்றுமைகள். மேடைகளில் பிரசங்கங்கள் தாம் இன்று மிச்சம். இந்தத் தலைவர்களுக்கும் பிரசங்கிகளுக்கும் தமிழனுடைய ஆயிரக்கணக்கான கிராமங்கள் குட்டிச் சுவராய்க் கிடப்பது தெரியாது. அறியாமையும் நோயும் வறுமையும் கிராமத்தவரைப் பலிகொள்வதைக் கவனிக்க மாட்டார்கள். மக்களை உற்சாக மூட்டி அவர்களை விழிப்புறச் செய்து அவர்கள் மத்தியிலேயே இருந்து உழைக்கும் ஒரு ஸ்தாபனம் தமிழ்நாட்டிற்கு வேண்டும். உண்மையான தொண்டில் பற்றுதல் கொண்ட பலர் கூட்டங் கூட்டமாகக் கிராமத்தில் புகுந்து உழைப்புக்கும் பிழைப்புக்கும் வழிகோல வேண்டும். அரசியலைப் பற்றிக் காரியஞ் சாதிக்க நினைப்பவர் ஒரு பாதி வேலையைத் தான் செய்ய முடியும். மறுபாதி, மக்களினால்தான் - அவர்கள் மத்தியில் உள்ள இந்தத் தொண்டர்களின் உதவியால் முடியும்.

இதற்கு நம் போன்ற இளைஞர்கள் ஆயிரக்கணக்கில் வேண்டும். இளைஞர்களுக்குப் பஞ்சம் இல்லை.

ஆனால் அவர்களுக்கு ஆதரவு வேண்டாமா? வீட்டில் தாயையும் தங்கையையும் பட்டினி போட்டுவிட்டு யாரால் தான் நாட்டிற்காக, சமூகத்திற்காக உழைக்க முடியும்?

என்னிடம் பணம் இருக்கிறது. ஆனால் எதிரே உள்ள மலை போன்ற காரியத்துக்கு இந்தப் பொருள் எந்த மூலை? சில இளைஞர்கள் உடனே காரியத்தில் இறங்கிப் பயன் இல்லை. எங்கோ ஓர் இடத்தில் குறுகிய அளவில் செய்யப்படும் காரியங்கள் மற்றவர்களுக்கு எங்கே எட்டப் போகின்றன?

ஓரிரண்டு வருஷங்கள் வெளியே சென்று வருவோம். நாட்டின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தக் கூடிய வழிகளைத் தெரிந்து அவற்றை இடைவிடாமல் பிரசாரம் செய்வோம். ஒருபுறம் பரபரப்பையும் விழிப்பையும் ஏற்படுத்திக் கொண்டே மறுபுறம் இயன்ற அளவில் செயலிலும் இறங்குவோம்.

சரி; இன்று முக்கியமான தபால்கள் இரண்டு. ஒன்று சின்னப் பட்டி கிராமத்து நடராஜன் என்பவரிடமிருந்து; மற்றொன்று கல்யாணியிடமிருந்து.

என்னுடைய பத்திரிகைக் கட்டுரை ஒன்றைப் படித்துவிட்டு நடராஜன் எழுதி இருக்கிறார். அவர் அந்த ஊர்ப் பள்ளிக்கூட ஆசிரியராம். வயது வந்த கிராமத்து இளைஞர்களை ஒன்றுகூட்டி ஒழிந்த வேளைகளில் கிராமப் பணி செய்துகொண்டிருக்கிறாராம். ஒரு முறை அவருடைய கிராமத்துக்கு வந்துபோகச் சொல்லி எழுதியிருக்கிறார். என் போன்ற மனத்தவர் பல இடங்களில் சிதறிக் கிடக்கிறார்கள்; அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தால்...

கல்யாணிக்குக் கல்யாணம்; பத்திரிகை அனுப்பினால் போதா தென்று கடிதமும் எழுதி இருக்கிறாள். மத்தியில் அவள் ஊர் சென்ற பிறகு அடிக்கடி அவளை நினைத்ததுண்டு. ஒவ்வொரு சமயம், 'கல்யாணியும் நம் போக்குக்கு ஒத்து வரக்கூடியவள்தானே? அவளைத் துணைவியாகக் கொண்டால் என்ன?' என்றும் நினைப்ப துண்டு. ஒருநாள் அவளுடைய மனசை அறிய அவள் ஊருக்கே செல்லலாமா என்றுகூட இருந்தேன். ஆனால் பிறகு எண்ணம் மாறிவிட்டது.

இனிக் கல்யாணியைப்பற்றி அந்த முறையில் நினைப்பது தவறு. கல்யாணத்தைப் பற்றிய யோசனையும் சமீபத்தில் நம்மிடம் தலைகாட்டாது. தாய் இனி அந்தப் பேச்சையே எடுக்காதபடி இந்தப் பத்திரிகையையும் அவர்களிடம் கொடுத்து, ''பாருங்கள், அம்மா! கல்யாணிக்குக் கல்யாணம்; என்றாவது செய்து கொள்ளலாம் என்று இருந்தேன். ஆகையால் அந்தப் பேச்சுக்கே மீண்டும் இடம் இல்லை'' என்று சொல்லிட வேண்டும்.

கல்யாணத்திற்குப் போக வசதிப்படாது. போகவும் நான் விரும்பவில்லை. மாப்பிள்ளை பெயரென்ன? முருகேசனா? இரு வரும் சந்தோஷமாக வாழவேண்டும். முருகேசன் கொடுத்து வைத்தவன். அதைப்போலவே அவளுக்கும் இன்ப வாழ்வளிக்கக் கூடியவனாக, அவளும் கொடுத்து வைத்தவளாக இருக்கவேண்டும்!

## 5

### கல்யாணி:

முதல் இரவுச் சம்பவங்கள் என் கண்முன்னே வருகின்றன.

என் மாமனார் வீடு அது. வீட்டில் பெரிய அறை. அறையின் பிற்பகுதியில் இருந்த ஒரு சன்னல் மட்டிலும் திறந்திருந்தது. திறந்த சன்னலருகில் போய் நின்றேன். சன்னலுக்கு அடுத்தாற்போல் ஆற்று மணல் வெளி. அந்த வெளியின் மத்தியைக் கீறிக் கொண்டு சிறு வாய்க்கால்போல் ஆற்று நீர் ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றின் அக்கரை நிலவொளியில் நன்றாகத் தெரிந்தது. கரையோரம் வேலி போல் இருந்த நாணற்புதரின் தலையில் வெள்ளை வெளே ரென்றிருந்த நாணற் பூ மங்கலாகத் தெரிந்தது.

வாணத்திலே சின்னஞ்சிறு மேகத் துண்டுகளுக்குள் ஒளிந்து ஒளிந்து கண்ணாமூச்சி விளையாடும் நிலவைப் பார்த்தபடியே நின்றேன். நிலவின் ஒளியும், அவ்வொளியில் ஆற்று நீரின் குளுமை யைச் சுமந்துவரும் தென்றலும், அடுத்த கணத்தில் கிடைக்க இருக்கும் முதல் இரவின் இன்ப சுகத்து நினைவும் என்னை என்னவோ செய்தன. மயக்கம் தரும் வெளி உலகத்தை விட்டுக் கண்களை ஒருமுறை என் உருவத்திலும், அந்த அறையின் அலங் காரத்திலும் செலுத்தினேன்.

அம்மா பொல்லாதவர்; அதாவது, என் கணவர் முருகேசனின் அம்மாவைச் சொல்லுகிறேன். அவர்கள் தாம் யாரோ அடுத்த வீட்டு

அம்மாவை அழைத்து எனக்கு இவ்வித அழகு எல்லாம் செய்து வைத்திருக்கிறார்கள். பேசும் படங்களிலே வரும் இளவரசியைப் போல் என்னைச் செய்து வைத்திருக்கிறார்கள்! இதிலும் எனக்குச் சந்தோஷந்தான். இடத்திற்கும் காலத்திற்கும் தகுந்த வேஷம்.

மெத்தையில் மல்லிகை கொட்டிக் கிடந்தது. எனக்குப் பிடித்த மணம் அது. வெள்ளித் தட்டில் பழங்கள் பட்சணங்கள், பக்கத்தில் கூஜாவில் நிறையப் பால்... நல்ல வேடிக்கையான ஏற்பாடுகள்!

ஊதுவத்திகளின் நறுமணப் புகை. மலர் வாசம் சத்தனம், சொல்லியும் கேட்காமல் என் மீது தெளிக்கப்பட்ட வாசனைத் துளிகள்...அப்பாடா! என்னைப்போன்ற கல்லூரி மாணவியையே இந்த மாதிரி அழகு பொம்மையாக மாற்றிவிடுகிறார்களே! அவர்கள் மேல் குற்றம் என்ன? - நான்? அனைத்தும் இந்த சமயத்தில் எனக்கு மறந்துவிட்டது. விவரிக்க இயலாத ஒன்று என் உள்ளத்தில் துள்ளு கிறது. மென்மையான மிருதுவான, நிலவு போன்ற எண்ணங்கள் என்னை விழுங்குகின்றன. நான் பெண், பெண், பெண்! - அவர் இன்னும் ஏன் வரவில்லை? எப்போது வருவார்? வந்து ‘அன்பே’ என்று அழைப்பாரா? இங்கு வந்து என்னருகில் நின்று இந்த இரவு முழுவதும் அந்த நிலவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பாரா? ஆம்; வந்துவிடுவார். வந்து மணிக்கணக்கில் பேசிக்கொண்டே இருப்பார். என்னுடைய அழகின் கர்வம் அவருடைய புகழ் மொழி யால் எவ்வி எவ்விப் பறந்து வானத்துச் சந்திரனைக்கூடத் தொட்டு விடும். யுக யுகாந்தரமாய்ப் பிரிந்திருந்த பழங் காதலர்களைப்போல இன்று ஒன்று கூடுவோம். ஆ! அந்த இன்பம்...

கதவு லேசாகத் திறக்கும் சத்தம் கேட்டது. நான் திரும்பிப் பார்க்கவில்லை. ஒவ்வொரு கணமும் அவருடைய அடிகள் என்னை நோக்கி நடப்பதைக் கேட்க என் செவிகள் ஏங்கியவண்ணம் இருந்தன. அவருடைய குளுமையான மூச்சுக் காற்று என் மேல் படர்வதாக ஏதோ ஒரு பிரமை. திரும்பிப் பார்த்தேன். அவர் என் சமீபத்தில் இல்லை. அந்தக் கதவருகிலேலே நின்று என்னை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் கண்கள்! ஏன் அவை சிவந்து இரத்தம் கக்குகின்றன? கோபத்தின் பார்வை அல்ல அது. பின்? அப்படி ஏன் அவர் என்னைக் கண் கொட்டாமல் பயங்கர மாய்ப் பார்க்கிறார்?

அவர் சிரிப்பது தெரிந்தது.

சிரிப்பில்லை அது. மனோவிகாரத்தின் அசட்டுத்தனம். சிரிப் பென்றால் அதில் கனிவும் மலர்ச்சியும் இருக்குமே. அதிகமாகக் குடித்திருந்த மனிதனின் தோற்றம் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது அவர் நிலை.

முகத்தை வேறு பக்கம் திருப்பிச் சுவரில் தொங்கிக் கொண் டிருந்த படத்தைப் பார்த்தேன். அந்த இடத்திற்கும் சந்தர்ப் பத்திற்கும் ஏற்காத - ஆனால் - ஏற்ற படம்.

ரம்மியமான சுற்றுப்புறக் காட்சி அந்தப் படத்தில். சிற்றோடை ஒன்றில் நீர் குடித்த மான், குடித்த பின்பு கழுத்தை வளைத்துப் பின்னே நோக்குகிறது. அந்தப்பாழும் சித்திரக்காரன் இத்துடன் தன் படத்தை முடித்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்; ஆனால் அந்த இளம் புள்ளிமானுக்கு அங்கே எமனையும் தோற்று வித்திருந்தான். சற்றுத் தூரத்தில் புதருக்குள்ளிருந்து படுவேகமாய் ஓர் வரிப்புலி மானை நோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சியைக் கண்டு நான் நடுங்கினேன்.

அறைக்குள் அப்போது ஒன்றுமே இல்லை. மலர், மணம், தென்றல், பன்னீர் எல்லாமே மறைந்துவிட்டன. அது இருண்ட காடு. அந்தக் காட்டில் குளிர்ந்த அருவி நீரைப் பருகித் தாகந்தீர்க்க வந்த மான் நான் - இந்த மானின் மேல் பாய...ஐயோ!

சுயநினைவைப் பெற்றபோது அவர் என் கரத்தை இறுகப் பற்றியிருந்தார். அவருடைய கை கொதித்தது; நடுங்கியது; இரும்புப் பிடியிலிருந்து விலகுவதற்காகச் சட்டென்று கரத்தை உதறினேன். மலரிதழ் போன்ற மெத்தென்ற ஸ்பரிச சுகத்தை எதிர்பார்த்த தெல்லாம் வீண்தானா? அவை யாவும் பொய்யாகக் கூடிய அர்த்த மற்ற எண்ணங்கள்தாமா?

கண்ணன் பாட்டிலே பாரதி கொட்டியிருக்கும் சிருங்கார ரச ஜாலங்களில் பலமுறைகள் முழுகி முழுகி எழுந்திருக்கிறேன். பல பெண்களோடு சேர்ந்து படித்து அநுபவித்து மன மோகன லாகிரி யிலே அமிழ்ந்திருக்கிறேன். சிருங்காரம் என்பது மனிதர்களைப் பொறுத்தமட்டில் கதைகளிலும் கவிதைகளிலுந்தானா? வாழ்வில் இருக்காதா, இருக்க முடியாத, அத்தனை நுண்ணிய பொருளா?

எந்த அழகுக்காக இதுவரை தலை குனியாத கர்வங் கொண் டிருந்தேனோ, எந்த அழகை என் சிநேகிதிகளும் என் சகோதர மாணவிகளும் ஒளிக்க முடியாமல் ஒப்புக் கொண்டு

போற்றினார்களோ, எந்த அழகால் அதற்கு உரியவரிடமிருந்து மனம் நிறைந்த பெரு மகிழ்ச்சியை எதிர்பார்த்தேனோ அதைப் பற்றி அந்த முதல் இரவில் ஒரு வார்த்தைகூட இல்லை! ஏன், எதைப் பற்றியுமே பேச்சில்லை. அக்கினிப் பசி வயிற்றில் மூண்டிருப்போருக்கு உணவின் ருசி எங்கே தெரியப்போகிறது? அதைச் சுவைத்து உண்ண அவர்களுக்கு எங்கே நேரம்?

படத்தில் புலி இன்னும் பாய்ந்துகொண்டுதான் இருந்தது. ஆனால் இங்கே மானைச் சவமாக்கித் தன் நெருப்பை அணைத்துக் கொண்டது உயிர்ப் புலி.

# 6

## முருகேசன்:

நான் சொல்லப்போகும் அபிப்பிராயம் உங்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். முக்கியமாகக் கல்யாணம் ஆகாத அதிருஷ்டசாலிகள், கதாசிரியர்கள், கவிகள், சினிமாக்காரர்கள், நாடகக்காரர்கள் - இவர்களுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. அவர்கள் எல்லோரும் சேர்ந்துதான், இல்லாத விஷயம் ஒன்றை இத்தனை ஆயிரம் வருஷங்களாய் உண்டு என்று தைரியமாகச் சாதிக்கிறார்கள். அதைச் சாதிக்கும் வேலை ஒன்று இல்லாவிட்டால், அவர்களுக்கு வேறு வேலை ஒன்றும் கிடையவே கிடையாது. எந்தப் பத்திரிகையை எடுங்கள், எந்த நாடகத்திற்குப் போங்கள், எல்லாம் அந்த மயந்தான் - காதல்;

காதல்! இந்த வார்த்தை காதுக்கு இனிமையாகத்தான் இருந்தது ஒரு சமயம். உலகமறியாப் பருவத்திலே மற்ற இளைஞர்களைப் போலவே இதில் நம்பிக்கை வைத்துத்தான் இருந்தேன். அதெல்லாம் அப்போது; காதலைப்பற்றித் தெரிந்து கொள்ளாத போது.

இப்போது சொல்லுகிறேன்: காதல் என்று ஒன்று இல்லவே இல்லை! முன்பும் இருந்ததில்லை; இப்போதும் கிடையாது; இனியும், என்றும் ஏற்படப் போவதில்லை. அத்தனையும் உலகத்தை ஏமாற்ற வந்த இந்தக் கூட்டத்தார் சொல்லி வைத்திருக்கும் பொய் மூட்டை. எனக்குக் கொஞ்சம் தாவர சாஸ்திரம் ஞாபகத்திற்கு வருகிறது. பூக்களில் சிலவற்றிற்கு ஏன் கண்களைப் பறிக்கும் நிறங்கள் கொடுத்திருக்கிறான் கடவுள்? சிலவற்றிற்கு ஏன் நிறைந்த வாசனையைக் கொடுத்திருக்கிறான்? இன்னும் பலப் பல திருட்டு

வழிகள் ஏன் அவற்றிற்குக் கொடுத்துக் கவர்ச்சியளிக்கச் செய்கிறான்? தங்களுடைய காதலின் நிறைவேற்றத்துக்காகவா? இப்படித்தானே சொல்வீர்கள்? இதை நானும் ஒப்புக் கொள்கிறேன். இயற்கையில் செடி கொடிகள், மிருகங்கள், மனித வர்க்கம் இத்தனைக்கும் பொது வாக அமைந்திருக்கும் ஒரு சாதாரண, விலக்க முடியாத தேவைக்கு அது எந்தப் பெயரானாலும் சரி. ஆனால் அதற்குமேல் அர்த்தம் அந்தச் சொல்லுக்கு இருக்கக் கூடாது.

காதலுக்குக் கோயில் கட்டுவார்களாம்; கவிதை மாளிகை எழுப்புவார்களாம்; நித்திய வஸ்துவாய் அதை வைத்துப் பூஜை செய்வார்களாம். காதல் இளமை குறையாததாம்; அழிவற்றதாம்; மிகப் பெரிய புனிதமான பொருளாம்! இப்படியெல்லாம் சொல்வதைக் கேட்டால் சிரிப்பு வருகிறதா, இல்லையா?

நான் மாணவனாயிருக்கையில் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு பெண்ணைக் காதலித்திருக்கிறேன். இரண்டு மூன்று காதல்கள்.

ஒருத்தி மிகச் சமீபமாக வந்தேவிட்டாள். எங்களுக்கு மத்தியில் ஒவ்வொருவர் குடும்பத்தையும் பார்த்தால் மிக விரிவான வேற்றுமைகள். இவ்வளவையும் தாண்டி அவள் தன்னை மணந்து கொள்ளும்படி என்னிடம் கூறினாள். கல்யாணமா? அத்துடன் அவள் காதலையும் ஆழக் குழி தோண்டிப் பத்திரமாய் மூடி விட்டேன். மற்றவள் அப்படி இல்லை. காதல்பற்றி என்னையொத்த கருத்துக் கொண்டவள். தாராளமாக இடங்கொடுத்து விட்டாள். இருவருக்கும் கசந்து விட்டது. இன்னும் இப்படி இப்படியே...

என்னுடைய தீர்மானம் இதுதான்; காதல் என்பது அருமையான பட்டுத் திரை அணிந்த பெண்ணின் முகம். திரையை விலக்கினால் அங்கே சர்வ சாதாரணமான, உங்களுக்கு எல்லையற்ற ஏமாற்றத்தை அளிக்கக் கூடிய, வியர்வையால் புழுங்கும் ஒரு ஜீவனைத்தான் காணுவீர்கள். காதல்மகத்துவமெல்லாம் அந்த ஜீவனால் அல்ல, இயற்கை மறைத்திருக்கும் அந்தமயக்கத் திரைக்குத்தான்.

இத்தனையும் என்னைப் பேசத் தூண்டியவள் சாட்சாத் சகதர்மிணி கல்யாணி தேவிதான். படித்தவளாம், படித்தவள்! இவள் படிப்பு இங்கே யாருக்கு வேண்டும்? நானும் இவளைப் போல் படித்தவன் என்பது தான் இவளுக்குத் தெரியுமே! தெரிந்திருந்தும், இவளுடைய வாழ்க்கை முழுவதும் என் கையில்தான் இருக்கிற தென்பதைக் கண்ட பிறகும், இவளுக்கு ஏன் என்னிடம் இந்த அலட்சியம்?

தெரியாதனமாய் இவளுடைய வெளிப் பகட்டில் மயங்கி விட்டேன். அதைப்பற்றி ஒன்றும் பிரமாதம் இல்லை இப்போது தான் என்ன மோசம் வந்துவிட்டது?

நண்பர்கள் முதல் முறை வீட்டிற்கு வந்தார்கள். நன்றாகத்தான் முகத்தை வைத்துக் கொண்டு புன் சிரிப்புடன் உபசரணை செய்தாள். இரண்டாம் தரம் வரும் போது ஏன் அப்படி உயிர் இல்லாதவள் போல் நடந்து கொண்டாள்? யாராவது, ஏதாவது சொல்லியிருந் தாலும் இருக்கலாம். நண்பர்களைப்பற்றிக் கோள் சொல்வதற்குத் தான் பக்கத்து வீடுகளில் தயாராக இருக்கிறார்களே!

கல்யாணமாவதற்கு முன்பு அவளை அவள் வீட்டில் சந்தித்தபோது சிரித்த சிரிப்பு, அப்புறம் எங்கேயோ போய்விட்டது. 'உம்'மென்றே இருக்கிறாள். சிரித்தால் கூட வேண்டுமென்றே சிரிப்பதுபோல் இருக்கிறது. கிடக்கட்டும் இவள் சிரிப்பு எனக்கு. எப்போதும் தேவை இல்லை.

அன்றொரு நாள், கல்யாணமான புதிதில் ஆபீசுக்குப் புறப்படும் போது, ''இன்றைக்குச் சாயந்தரம் சீக்கிரம் வந்து விடுகிறீர்களா?'' என்று கதவோரத்தில் நின்று கொண்டு கேட்டாள். ''சரி, ஆகட்டும்'' என்று புறப்பட்டேன். ஜம்புவும், ராமசாமியும் செய்த கேலிகளைப் பொருட்படுத்தாமலே அன்று சீக்கிரம் திரும்பினேன். காபி, பட்சணங்கள் தயாராக இருந்தன. வீட்டுக் கொல்லைப்புறத் தோட்டத்தில் கொண்டு போய் வைத்துச் சாப்பிட்டோம். பிறகு அவள் ஏதேதோ பத்திரிகைகள் புத்தகங்கள் எடுத்து வந்தாள். வாசிப்பு, தர்க்கம், பேச்சு எல்லாம் அவளுக்குச் சுவாரஸ்ய மாயிருந்தன. எனக்கும் அன்று அவ்வளவு வெறுப்பாகவே இல்லை.

''தினமும் இப்படி வந்துவிடுங்களேன். ஆபீஸில் இருக்கிற வேலைத் தொல்லைக்கு இது கொஞ்சம் மாற்றாக இல்லையா? ஒவ்வொரு நாள் எங்காவது வெளியில் சென்று வருவோம்'' என்றாள் கொஞ்சலாக.

மனத்திற்குள் கடுப்புடன், ''சரி'' என்று சொல்லி வைத்தேன். தினமும் சாயங்காலம் நேரே வீட்டுக்கு வர வேண்டுமாம். கடை வீதி, கோயில், குளம், இங்கெல்லாம் அவளுடன் சுற்ற வேண்டு மாம். இல்லாவிட்டால் எனக்கு ருசியில்லாத விஷயங்களை அவளிடமிருந்து கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமாம்!

இரண்டு மூன்று நாட்களில் அவள் போக்கில் எனக்குச் சலிப்புத் தட்டிவிட்டது. ஒருநாள் கண்டிப்பாகக் கூறிவிட்டேன். ''இதோ பார்; நான் ஆண் பிள்ளை. எனக்கு வெளியே எத்தனையோ வேலைகள் இருக்கும். உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளுவதற்கு முன்பே எனக்குப் பல நண்பர்கள் உண்டு. அவர்களுடன் பொழுதைக் கழிக்க வேண்டும். உன் இஷ்டப்படி என்னைக் கட்டப்படுத்திக் கொள்ள முடியாது. ராத்திரி வந்தாலும் வருவேன்; வராமல் இருந்தாலும் இருப்பேன். எல்லாம் இங்கு என் நோக்கப்படிதான்'' என்றேன்.

''ஆபீஸ் நேரம் போக, உங்களுடைய சிநேகிதர்களிடம் கழித்த நேரம் போக, உங்களுடைய மனைவிக்காகக் கொஞ்ச நேரம் ஒதுக்க முடியாதா? இரவு பத்து மணிக்குமேல் வந்து அதிகாலையில் புறப்பட்டு விடுகிறீர்கள்; மத்தியான்னச் சாப்பாடு பையனிடம் கொடுத்தனுப்புகிறேன். லீவு நாட்களில் கூட வீட்டில் தங்கக் கூடாதா? தனிமையில் இந்த வீட்டில் நான் ஒவ்வொரு நாளும் எத்தனை மணி நேரந்தான் இருப்பது?'' என்றாள்;

''தனிமையில் இருக்க முடியவில்லையா? இருந்துதான் ஆக வேண்டும். இல்லாவிட்டால் உன் பிறந்த வீடு போகலாம்; உன்னைக் கட்டி வைத்த மாமனார் வீடு போகலாம்'' என்றேன்.

அதிலிருந்து வேண்டுமென்றேகூட நாழிகை கழித்துச் செல்ல ஆரம்பித்தேன். சுந்தரியைப்பற்றி அவள் எப்படியோ தெரிந்து கொண்டு இம்மாதிரியெல்லாம் பேசுகிறாள் என்று எனக்குப் புரிந்துவிட்டது. இது பற்றி எனக்கொன்றும் கவலையில்லை என்று அவளுக்குக் காட்டிக் கொள்ளவே அவ்வாறு செய்தேன்.

இன்னும் முழு இரவும் கல்யாணத்திற்குப் பிறகு வெளியே தங்கியதில்லை. அப்படித் தங்கினால்தான் என்ன? சுந்தரியின் பரிகாசம் இதனால் அளவு கடந்து விட்டது. இனித் தங்கத்தான் வேண்டும். அந்தக் கர்வம் பிடித்த கல்யாணி என்னைச் சரியாகப் புரிந்து கொள்வதற்காகவாவது அப்படிச் செய்ய வேண்டும்.

இதிலிருந்து கல்யாணிக்கு அதிகமான அலட்சியம் பிறந்து விட்டது. அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது. தான் ஏதோ உயர்ந்த பிறவி என்ற முறையில் தலைக்கனத்துடன் நடந்து கொள் கிறாள்! அவள் அகம்பாவத்தைக் குலைத்து, அவள் ஆசைகளை அழித்து, அவளை என் காலடியில் விழுந்து கெஞ்சச் சொல்கிறேன். பெண்ணின் நிலைமை எவ்வளவு தூரம் அவள் கணவனின் கைக்குள்

அகப்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதை அவளுக்குக் காண்பிக்கிறேன்.

# 7

## பாலசந்திரன்:

ஒரே மாதிரி முற்போக்கு மனம் படைத்த இளைஞர்கள் பல இடங்களில் இருக்கிறார்கள். பல கூட்டங்களில் பேசிய பின் இந்த உண்மை தெரிந்தது. சின்னப்பட்டி உபாத்தியாயர் நடராஜன் நெருங்கிய நண்பராகி விட்டார். ஏற்கனவே அவ்வூரில் மௌனமாக கிராம சேவையை மேற்கொண்டிருந்தவர், அவருடைய யோசனைப் படி பிரசாரத்திற்காக இந்தக் 'கிராமம்' வெளியீடு மிகவும் முக்கிய மானதுதான். சுற்றுப்புறத்து இளைஞர்களுக்கு இயல்பாகவே சீர்திருத்தத்தில் ஆர்வம் இருக்கிறது. அவர்களுடைய அரிய சக்தியை ஒன்று திரட்டி அதை நமது சேவையில் பயன்படுத்த வேண்டும்.

கிராமாந்தரங்களில் சீர்திருத்தங்கள் செய்வதற்கும் இந்த நகரத்தைத்தான் தலைமைக் காரியாலயம் ஆக்க வேண்டியிருக்கிறது. இதைச் சுற்றிலும் உள்ள கிராமங்களில் இப்போது வேலையைத் தொடங்கினால் போதும். சாதாரணமாக உண்மைக்குக் கட்டுப்படக் கூடிய மனிதர்கள்; இங்கொன்றும் அங்கொன்றுமாகக் கூட்டுறவுக் கடைகள், லேவாதேவி நிலையங்கள், ராட்டைக் கழகங்கள் - இவை நல்ல ஏற்பாடுதான். இப்போதைக்குச் சிறிய வைத்திய கோஷ்டி ஒன்று போதும். வைத்தியரும் அவர் மனைவியும் தங்கமான மனிதர்கள். முதியோர் பள்ளிக்கூடத்திற்கும் பக்கத்துக் கிராமத்தில் இப்போது ஆரம்பத்தைவிட அதிகமாக வருகிறார்களாமே! இந்த ஏற்பாடுகள் நடைமுறையில் அளிக்கும் பயனைப் பார்த்து, வேண்டியவாறு திருத்தங்கள் செய்து கொள்ளலாம். அதே சமயம் இதன் விளைவுகள் நமது பிரச்சாரத்திற்கும் தகுந்த விதத்தில் பயன்படும்.

வீடு கிடைக்காத காலத்தில் இந்தச் சிறிய வீடு இங்கே கிடைத்ததே பெரிய காரியம். சுற்றிலும் செடி கொடிகள். வாசலில் வேம்பும் மரமல்லிகையும். அம்மாவுக்கு இங்கே நன்றாகப் பொழுது போகும். ஒவ்வொரு செடியையும் கொடியையும் தம் முடைய சொந்தப் பிள்ளைபோல் கவனித்து, அதற்கு ஆக்கம் செய் வதற்கே நேரம் போதாது. சமைலுக்கு ஆள் வேண்டாமாம். தோட்டக்காரன் மாத்திரம் போதுமாம்.

அம்மாவை நன்றாகத் தயார் செய்து விட்டேன். இப்போ தெல்லாம் கனவில்கூடக் கல்யாணப் பேச்சை அவர்கள் எடுப்ப தில்லை.

# 8

**கல்யாணி:**

**நா**னும் புருஷன் வீட்டில் வாழ்ந்து வருகிறேன். அப்படித்தான் சொல்லத் தோன்றுகிறது எனக்கு. வாழ்வு என்பதற்கு அர்த்தம் நான் வாழும் வாழ்க்கைதான் என்றால், அதை மிகக் கொடிய நரகம் என்பேன்.

ஒரு வாரமாய் வீட்டில் படுத்த படுக்கையாக இருந்தார். தூக்கத்தை மறந்து எனக்கு ஒரு வாரமாயிற்று. எந்நேரமும் அவர் பக்கத்தில்தான் இருந்தேன். தெரிந்த கடவுள்களையெல்லாம் வேண்டிக் கண்ணீர் வடித்தேன். டாக்டர் என் துயரத்தைக் கண்டு அதிக இரக்கப்பட்டார். தாமே சில முக்கியமான மருந்துகளைக் கடையிலிருந்து வருவித்து அவருக்குக் கொடுத்தார். அடுத்த நாளே ஆபீசுக்குப் புறப்பட்டுவிட்டார்.

புறப்படும்போதே, ''கவனமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்; சீக்கிரம் வந்துவிடுவீர்களா?'' என்றேன் தயக்கத்துடன். அதை அவர் காதில் போட்டுக்கொள்ள விரும்பவில்லை. என் பேச்சைக் கேட்க வெறுப்புற்றவர் போல் முகத்தைச் சுளித்துக்கொண்டு கிளம்பினார்.

இரவு பத்து மணி வரையில் பார்த்தேன். பதினொன்றாயிற்று; பன்னிரண்டு, ஒருமணி; பிறகு ஏதோ பெயருக்குத் தூங்கினேன். அதி காலையில் ஐந்து மணிக்கு வந்து கதவைத் தட்டினார். அப்பொழுது வந்து படுத்தவர் மத்தியானம்வரை எழுந்திருக்கவில்லை. அன்று ஞாயிற்றுக்கிழமை. ஆபீஸ் இல்லை.

''இந்தமாதிரி உடம்பை வைத்துக்கொண்டு ராத்திரியெல்லாம் எங்கே போயிருந்தீர்கள்? ஒரு வாரமாய்க் கிடந்ததை மறந்து விட்டீர்களே! வீட்டில் ஒருத்தி இருக்கிறாளே என்ற நினைவாவது வேண்டாமா?'' என்றேன்.

''அது என் இஷ்டம்! என் உடம்பைப்பற்றி எனக்குத் தெரியும். வீட்டில் நீ இருந்தால், உனக்காக நான் இங்கே ஓடிவந்து விட வேண்டுமா? இஷ்டம் இருந்தால் இரு. இங்கே இல்லாவிட்டால்

உன் தாய் வீட்டுக்காவது, உன்னை என் தலையில் கட்டி வைத்த மாமனார் வீட்டுக்காவது புறப்படு!'' என்றார்.

அவர் என் கண்களுக்கு மனிதராகத் தெரியவில்லை. விஷமே இரத்தமாக உள்ள நெஞ்சு படைத்த அரக்கர்.

அவருக்காக நாள்தோறும் மணிக்கணக்காக விசிறிய என் கைகளில் வலி இன்னும் தீரவில்லை. நல்ல உணவை மறந்து ஏழெட்டு நாட்களாகிவிட்டன. பல நாட்களாக அவருக்காக அகற்றப் பட்டிருந்த தூக்கம் இன்னும் என் கண்களைச் சுற்றிக் கெஞ்சியது. அவரைக் கவனிக்கும் ஆத்திரத்தில் என்னையே மறந்திருந்தேன். இன்னும் ஓரிரண்டு நாட்கள் இப்படியே இருந்தால் நான் நோய்வாய்ப்பட்டு படுக்கையில் விழுந்திருப்பேன்.

தனிமையில் தேம்பித் தேம்பி அழுதேன். எண்ணற்ற நினை வலைகள் மனப் பாறையில் சீறிச் சீறி வந்து மோதித் தூள் தூளாயின. கணவன் என்பதும், அவன் அன்பில் விளையும் சுகம் என்பதும் இதுதானா?

அப்போதும் நான் ஊர் புறப்படவில்லை, ஊருக்குப் புறப்பட்டு என்ன பயன்? தாயின் வீடும், மாமனார் வீடும் எனக்கு அளிக்கப் போகும் ஆதரவு என்ன?

என் மாமனார் முதல் முறையாக அப்போதுதான் நாங்கள் குடும்பம் நடத்தும் அழகைப் பார்க்க வந்தார். சொந்த ஊரில் அவருக்குப் பல வேலைகள். தம்முடைய சிறிய மகன் சிவசாமிக்குச் சமீபத்தில்தான் திருமணம் முடித்தார். நாங்களும் போய்விட்டு வந்தோம்.

வந்து தங்கிய இரண்டு மூன்று நாட்களுக்குள் அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. அவர் ஒன்றும் நினைத்துக்கொள்ளக் கூடாதே என்று மிகவும் மகிழ்வோடிருப்பதாகத்தான் நான் பாவனை செய்து கொண்டேன்.

ஆனால் அவர் வயசின் அநுபவத்தை ஏமாற்ற என்னுடைய பொய் வேஷம் எந்த மூலைக்கு?

கண்களில் நீர் துளிர்க்க அழாக் குறையாய் என்னிடம் கூறினார். ''அம்மா, என்னுடைய புத்தியைச் சொல்ல வேண்டும். இந்தக் கிராதகனுக்குப் போய் உன்னை மணம் முடித்து வைத்தேனே!

தெரிந்து தானம்மா இதைச் செய்தேன். ஒருவேளை கல்யாணமாகி விட்டால் புத்தி திருந்தாதா என்று எனக்கு ஓர் ஆசை. வரப்போகிற பெண் குணவதியாக இருந்தால் அவன் மனம் மாறிவிடாதா என்ற எண்ணம். அந்த எண்ணத்தில் மண் விழுந்ததம்மா! உன்னைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லையே'' என்று உருக்கமாகக் கூறினார். அவர் தாம் கட்டாயப்படுத்தி ஊரில் ஒரு மாதம் வந்து இருந்து வரலாம் என்று அழைத்துச் சென்றார்.

மாமியாருக்கு என் வரவால் பேரானந்தம். என் நிலைமையை அறிந்து அதனால் அநுதாபம். எனக்கு என் வாழ்வு மிகக் கேவலமாக இருந்து. மற்றவர்கள் பார்த்து இரங்கக்கூடிய அவ்வளவு தாழ்வான நிலையில் நான் இருந்தேன்.

கொழுந்தனார் சிவசாமி நல்ல மனிதர். குடும்பப் பொறுப்பை முழுவதும் தாமே நடத்தி வந்தார். வயசு அதிகமான காலத்தில் தகப்பனாருக்கு ஒரு வேலையும் அவர் வைப்பதில்லை. கண்ணியமும், பெருந்தன்மையும், உலக அறிவும் அவரிடம் நிறைய இருந்தன. ஒரே தாயின் வயிற்றில் பிறந்த அவருக்கும் என் கணவருக்கும் எத்தனை வித்தியாசம்!

அவர் மனைவி பத்மா கொஞ்சம் படித்தவள். ஆனால் நான் அங்கே சென்றதிலிருந்து தான் அதிகம் படித்ததாக நினைத்துக் கொண்டாள் போலும்! பெரும்பாலும் பத்திரிகை, புத்தகம், நாவலில் மூழ்கியிருப்பாள். வேலைக்காரியைப் பார்க்கும் தோரணையில் என்னைப் பார்ப்பாள். அவள் பேச்சு விசித்திர மாயிருந்தது.

மாமி என்னிடம் அதிகப் பரிவோடு நடந்து கொண்டது, அவளுக்குப் பிடிக்காமல் இருந்தது. தான்தான் அந்த வீட்டின் எஜமானி என்பதைக் காட்டிக் கொள்ள விரும்பினாள். அவள் போக்கு அங்கு யாருக்கும் அவ்வளவு பிடிக்கவில்லை. மாமியே அதிக வருத்தப்பட்டுக் கொண்டார்.

''சின்னஞ் சிறுசுகள் சந்தோஷமாக இருக்கவேண்டுமென்றுதான் நான் அவள் விஷயத்தில் தலையிடுவதே இல்லை. அதை அவள் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறாள். இந்தத் தள்ளாத வயசில் இந்த வீட்டு வேலைகளைக் கவனிக்க எனக்குக் கொஞ்சமாவது ஒத்தாசையாக இல்லாவிட்டால் நான் அவளைப்பற்றி என்னை நினைப்பது கல்யாணி?

''அவளுக்கும் சேர்த்து வேலை பார்க்க வேண்டுமென்கிறாளா? வீடு, பொறுப்பு, புருஷன் என்ற எண்ணம் வேண்டாமா? இன்னும் நான்தான் அவனுக்கு வேண்டிய தேவைகளைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது'' என்று சொல்லி அங்கலாய்ப்பார்.

ஆனால் நான் போன பிறகு மாமனாருக்கு ஏதாவது உதவி செய்ய எழுந்தால் கொஞ்சமும் ஏற்றுக்கொள்ளமாட்டார். பிடிவாத மாய் மறுத்துவிடுவார். ''நீ என் வீட்டுச் செல்லப் பெண். பேசாமல் இரு. எத்தனை நாள் வேண்டுமானாலும் இரு. எனக்குப் பெண் இல்லை. நீ வளர்ந்த அருமை எனக்குத் தெரியும். இப்போது அந்தப் பாவிப் பயலிடம் படுகிற கொடுமையும் கேட்டேன்'' என்று என்னை மகிழ்விப்பதில் அதிகச் சிரத்தை எடுத்துக் கொண்டார்.

என்னிடம் இந்த வீடே இவ்விதம் அன்பாக நடந்து கொள்வதை பத்மா சகித்துக் கொண்டிருப்பாளா? ஒரு நாள் சிவசாமி அவளிடம், ''அண்ணியும் உன்னைப் போலப் பெண்தானே? வீட்டில் அம்மா வுக்கு உதவியாக அவர்கள் 'வேண்டாம்' என்று சொன்னால்கூடக் கேளாமல் என்ன ஒத்தாசை செய்கிறாள்! உன்னைவிட எந்த விதத்திலும் குறைந்துவிடவில்லை. அண்ணி அப்படி இருக்கையில், எந்நேரமும் ஒரே புத்தகமும் கையுமாய்ப் பரீட்சைக்குப் போகிறவள் போல உட்கார்ந்திருக்கிறாயே!'' என்றார்.

நான் அடுத்த அறையில் இருந்தேன். அது அவர்களுக்குத் தெரியாது.

''அந்த வாழாவெட்டி இங்கு வந்ததிலிருந்து தான் வீடே தலை கீழாய் மாறிப் போய் விட்டது. எப்போதுமே உங்களைப் போல ஆண்களின் கண்ணுக்கு வேறொருத்தியின் சாமர்த்தியந்தான் உடனே தெரியும். அவள் பிறத்தியான் மனைவி அல்லவா? அதனால்!'' என்றாள்.

என் உடம்பில் தீப் பிடித்துக் கொண்டதுபோல் இருந்தது எனக்கு - வாழாவெட்டி!

அதே சமயம் அடுத்த அறையில் 'பளீர்' என்ற அறையும் அதைத் தொடர்ந்து பத்மாவின் தேம்பலும் ஒலித்தன - இனி நான் அங்கு விநாடி நேரங்கூட இருக்க விரும்பவில்லை. மாமாவும் மாமியும் எவ்வளவோ சொல்லியும் கேளாமல் மறுநாளே புறப்பட்டேன்.

திரும்பி வந்து வீட்டைப் பார்க்கையில் அது வீடாக இல்லை. சுடுகாடாயிருந்தது. எங்கும் எச்சில், சிகரெட் குப்பைகள், காகிதக் குவியல்கள், காய்ந்த வெற்றிலைச் சருகுகள் மூலைக்கு மூலை கிடந்தன. அடுத்த வீட்டுப் பெண் சொல்லியதைக் கேட்டபோது என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. வெட்கம் மட்டுமா, இன்னும் பலப்பல உணர்ச்சிகள்.

அவருடைய அழகான நண்பர்கள் இங்கேதான் வந்து ஒன்று கூடுவது வழக்கமாம். பகல்; இரவு இன்ன வேளை என்றில்லை. அக்கம் பக்கத்தில் கௌரவமாக வாழ்க்கை நடத்தி வரும் குடும்பத் தார்களைப் பற்றி ஏதும் நினைத்துப் பார்ப்பது கிடையாது. சீட்டாட்டம், காலித்தனம், சிரிப்பு, கும்மாளம்! - பொறுப்புள்ள ஆண் பிள்ளைகளா இவர்கள்?

அந்தப் பெண் கௌரி இதையும் சொன்னாள். எதை நான் முழுக்க முழுக்க எதிர்பார்த்தேனோ அது நடந்திருக்கிறது. ஆனால் இப்படி என் வீட்டிலேயே அந்தப் பாதகச் செயல் நிகழுமென நான் நினைக்கவும் இல்லை. தாம் குடும்பம் நடத்தும் வீட்டிலேயே ஓர் ஆண்பிள்ளை காலிக் கூட்டத்துடன் சேர்ந்து வேசியை இழுத்து வருவாரா?

அவளைப்பற்றி எனக்கு ஏற்கனவே தெரியும். தெரியுமா என்று நீங்கள் ஆச்சரியத்தோடும் திகிலோடும் கேட்பீர்கள். நானும் முதன் முதலில் இதைக் கேட்டபோது அப்படித்தான் அயர்ந்துபோனேன். என் வீட்டு மேற்கூரை திடீரென இடிந்து என் தலையில் கொட்டி, என்னை முழுவதும் மூடி உயிருடன் புதைத்து விட்டதாக உணர்ந்தேன். நாளடைவில் இந்த வலி இருதயத்தில் அவ்வளவு இல்லை. என் வீட்டின் ஆபாச இருள் நாளுக்கு நாள் என் கண் களுக்குப் பழக்கமாகி வருகின்றது. ஆனால் ஒன்று மாத்திரம் நிச்சயம்; நான் இப்படியே எப்பொழுதும் குப்பையில் புழுவாக நெளிந்து கொண்டிருக்க மாட்டேன், என்னால் இது முடியாது. வளைந்து கொடுத்துக்கொண்டே வருவேன். அநியாயச் சுமையைத் தாங்க முடிந்த மட்டும் தாங்குவேன். ஆனால் ஒருபோதும் அநியாயத்திற்கு அடிபணிந்துபோய், அவ்வளவு தூரம் வளைந்து தரையில் தலை படும்படியாக அப்படி விழமாட்டேன். அந்த நிலைமை வந்துகொண்டிருக்கிறது. அப்போது பெரிய சத்தத்துடன் நான் முறிந்து விழுவதை அவர் தம் கண்களாலேயே பார்க்கப் போகிறார்.

அவர் என்ன வேலைகளை எல்லாம் செய்யச் சொல்கிறாரோ அத்தனையும் செய்கிறேன். அவருக்கு வேண்டியபடி வெந்நீர், காபி, நேரந் தவறாது உணவு, பிற சௌகரியங்கள் அத்தனையும் கவனிக்கிறேன். ஒழிந்த வேளைகளில் அழுக்குத் துணி துவைத்துப் போடுகிறேன். ஒன்று மட்டிலும் என்னால் ஆகவில்லை. அவர் முன்பு சந்தோஷத்துடன் நடந்துகொள்ள இருதயம் மலரவில்லை. அப்படி இருந்த நாட்களில், நான் மகிழ்வுடன் அம் மலர்ச்சிக்குச் சரியான பதில் கிடைக்காததால் இருதயம் சாம்பிவிட்டது. இருந்தாலும் சிரமப்பட்டுப் புன்சிரிப்பை வரவழைத்துக்கொள்ள முயல்கிறேன். அது ஆகிற காரியமா?

அவர்மீது குற்றம் சுமத்திக்கொண்டே போகிறேன். இப்போது அவரிடமிருந்து எனக்கு என்ன தேவை என்பதைச் சொல்லுகிறேன். முதலில் அவர் என்னைப் புரிந்துகொள்ள வேண்டும். வாழ்க்கை முழுவதும் நம்முடன் இருக்கப் போகிறவளுடைய ஆசைகள் என்ன, நோக்கம் எப்படி, மனப் பண்பு எவ்விதம் என்பதை அவர் தெரிந்து கொள்ளட்டும். என்னிடம் எவ்வித ஒளிவுமறைவும் இல்லை. ஆனால் உள்ளத்தை வெளியிட்டு எதிர் உள்ளத்தை அன்போடு ஆகர்ஷிக்கச் சந்தர்ப்பம்? உள்ளங்கள் ஒன்றோடு ஒன்று கரங்கோத்து இன்ப வெளியில் உலவ நேரம்?

கல்யாணமாகி மூன்று வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டன. இன்னும் ஒரு நாள் அமைதியாக உட்கார்ந்து நாங்கள் மனம்விட்டுப் பேசியதில்லை. என்னை மதிக்க அவருக்கு விருப்பம் இல்லை. என்னுடைய அறிவு, என்னுடைய எண்ணங்கள் அவருக்குக் கேலி கூத்தாகப்படுகின்றன.

அவர் 'ஆண்பிள்ளை!' ஆபீசில், ஆபீசுக்காக வெளியே போகும் வேளையில் முக்கால்வாசி நேரம் போய்விடுகிறது. மற்ற வேளையில் எத்தனையோ பொழுதுபோக்கு அவருக்கு. நண்பர்கள், கடற்கரை, சினிமா - எங்கெல்லாமோ போகிறார். வருகிறார். நான்? நான் பெண் பிள்ளை! கட்டுப் பெட்டியாய் எந்நேரமும் இந்த வீட்டிற்குள்ளே அடைபட்டுக் கிடக்க வேண்டும். அப்படிக் கிடக்கவும் தயார். அதைவிடக் கொடிய முறையில் வாழவேண்டி யிருந்தாலும் நான் பின்வாங்க மாட்டேன். ஆனால் ஒரு துளி அன்பு வேண்டாமா? தனிமை கொல்லும் நேரத்திலே, அந்த அன்பை எண்ணி அதே தனிமையை இனிமையாக்க ஓர் அழகிய சந்தர்ப்பத்தின் நினைவு வேண்டாமா? ஈரமில்லாத, பசையில்லாத

நெஞ்சு கொண்டவருக்காக நான் இந்தக் கேவலமான வாழ்க்கையில் கிடந்து உழலவேண்டுமா? வாழ்க்கை அவருக்குப் புளித்துவிட்டது. ஆனாலும் அந்தப் புளித்த வாழ்க்கையிலேயே மேலும் மேலும் ஒரு நோக்கமும் இன்றி அமிழ்ந்துவிடுகிறார். மிதமிஞ்சிய குடிகாரன் ஒரு ருசியுமின்றி ஒன்றன்பின் ஒன்றாய்ப் புட்டியைக் காலி செய்து கொண்டிருப்பானாம்! அவர் போக்கு அப்படி; எனக்கு அப்படி இல்லையே! வாழ்க்கை புதியது. அதனுள் இருக்கும் பல அழகிய ரகசியங்களை நான் தெரிந்து கொள்ளவேண்டும். அதன் அநுபவமே எனக்கு ஒரு கலையாகத் தோன்றுகிறது. கலை வாழ்வு வாழவேண்டும் நான்; என் துணைவரும் நானும் இன்பக் கலைச் சோலையாக இந்த வாழ்வைக் காண வேண்டும்.

இவையெல்லாம் கூறி என்ன பயன்? நான் மனிதரோடு வாழவில்லை: மனித மனம் இவருக்குக் கிடையாது. காலேஜில் படிக்கும்போது ஓர் அம்மா எழுதியிருந்தாரே, வாழ்வில் பெண் எதையுமே எதிர்பார்க்கக்கூடாதென்று; அதை அவர் எனக்காகத்தான் எழுதியிருந்தாரோ? இருக்காது; எனக்காக எழுதியிருந்தால் ‘வாழ்வில் துன்பம் ஒன்றுதான் பெண்ணுக்குத் துணை’ என்றல்லவோ எழுதியிருப்பார்?

## 9

### பாலசந்திரன்:

பல தினங்களுக்குப் பிறகு இன்றுதான் நல்ல தூக்கம் வந்தது. வெளியூர் வேலைகள் ஒரு விதமாக இருக்கின்றன. இரண்டொரு நாள் இங்கே தங்கிச் செல்லலாம்; ஓய்வு எடுத்துக் கொண்டதுபோல் இருக்கும்.

புதிய வீட்டின் வெளி அறையில் நல்ல காற்று. வந்து படுத்ததுதான் தெரியும்! காலை ஐந்தரை மணிக்குத்தான் விழிப்பு வந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டு வெளி வராந்தாவில் வந்து குறுக்கும் நெடுக்கும் உலவினேன். கண்கள், மாடி வீடுகளுக்கு மேலே தெரிந்த உஷத் காலத்து வானத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தன.

யதேச்சையாக பார்வை எதிர் வீட்டுப் பக்கம் சென்றது. அந்த வீட்டுப் பெண் குனிந்து கோலமிட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய கரம் இந்திரஜாலம் செய்வதுபோல் வண்ண வண்ணக் கோடுகளைத் தரையில் வளைய விட்டுக் கொண்டிருந்தது.

அழகான கோலம்! தமிழகத்துப் பெண்கள்தாம் தங்கள் வீட்டை அலங்கரிப்பதற்கென்று எத்தனை எத்தனை கலைகள் கற்று வைத்திருக்கிறார்கள்! ஒரு விநாடி நேரத்தில் வாசலில் பளிச்சென்று அந்தக் கோலம் மின்னிக் கொண்டு விளங்கியது.

தலையை அந்தப்பெண் தூக்கும்போது கவனித்தேன். எங்கேயோ அந்த உருவத்தைப் பார்த்திருப்பதாக ஞாபகம். அவளுடைய நிமிர்ந்த பார்வையும் எதிரே தூரத்தில் இருந்த என்மீது சாதாரணமாய் விழுந்தது. ஆச்சரியந்தான்! அவளும் முகத்தைச் சுளித்துக்கொண்டு உற்று நோக்கினாள். ஆச்சரியமேதான்! அவள் கல்யாணி...

''கல்யாணியா!'' - வராந்தாவை விட்டு கீழே இறங்கிப் போனேன்.

''ஆம்; இங்கேயா இருக்கிறீர்கள்?''

''நேற்றுத்தான் இந்த வீட்டிற்குக் குடி வந்தேன்.''

''அவர் இன்ஜினியர், ஆபீசில் சூபர்வைஸர். இங்கே தான் இருக்கிறோம்'' என்று சொல்லிப் பின்புறம் திரும்பினாள். அப்போதுதான் அந்த மனிதரும் எங்கள் குரல் கேட்டு வெளியே வந்தார்.

''இவர் என்னுடைய பள்ளிக்கூடத்துச் சிநேகிதர். அடிக்கடி பத்திரிகைகளில் படிக்கிறீர்கள் இல்லையா, அந்தப் பாலசந்திரன்'' என்று என்னை அவருக்குக் கல்யாணி அறிமுகப்படுத்தினாள். அவர் மெதுவாகச் சிரித்துக் கொண்டார்.

''இங்கேதான் இன்று இருக்கிறேன். சாயங்காலம் வாருங் களேன். பேசலாம்'' என்றேன்.

''அதற்கென்ன? ஆகட்டும்'' என்றார் முருகேசன்.

ஆனால் சாயந்தரம் அவர் வரவில்லை; கல்யாணி மட்டிலுந்தான் வந்தாள். கல்யாணியின் வரவால் அம்மாவுக்குப் பரம சந்தோஷம். என்னைக்கூடச் சரியாகப் பேசவிடாதபடி, பெரும் பொழுதை அவர் களே எடுத்துக் கொண்டார்கள்.

''என்ன கல்யாணி, மிகவும் இளைத்துப் போய்விட்டீர்களே! காலையில் நீங்கள் என்னைச் சரியாகப் பார்த்திருக்காவிட்டால், என்னால் உங்களைச் சுலபமாய்த் தெரிந்து கொண்டிருக்க

முடியாது!'' என்றேன் - உண்மையே அப்படித்தான். அத்தனை தூரம் உருவமே மாறிப் போயிருந்தாள் கல்யாணி. நோய்வாய்ப்பட்டு எழுந்தவள் போல இருந்தது.

''அப்படியா அதிகமாய் இளைத்துவிட்டேன்?'' என்று லேசாகச் சிரித்தாள் கல்யாணி.

புருஷனைப்பற்றி, குடும்பத்தைப்பற்றி எல்லாம் விவரமாக விசாரித்தேன். யாவும் திருப்திகரமாகவும் சுகமாகவும் இருப்பதாய்ச் சொன்னாள். இருந்தாலும் என்னால் நம்ப முடியவில்லை. உடல் நலக் கேட்டிற்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் உற்சாகமும் உண்மைத் தெம்பும் அவள் முகத்தில் இல்லையே! ஏதோ ஒன்று அவளுடைய மகிழ்வின் மறைவை அவள் தோற்றத்தில் தெரிவிக்கின்றதே! ஒவ்வொரு குடும்பத்திலும் எத்தனையோ விவகாரங்களும் சிக்கல்களும் இருக்கலாம். இப்படித்தான் மனைவியும் பிள்ளை குட்டிகளுமாய் இருக்கும் மனிதர்கள் பேசுகிறார்கள். எனக்குத் தாம்பத்திய வாழ்க்கையைப்பற்றி ஒன்றும் தெரியாது. என்றாலும் பெண்களில் இப்படி மாறிப் போனவர்களை நான் அதிகம் பார்த்ததில்லை.

காரியதரிசி என்ற பொறுப்பின் கர்வத்துடனும், காரியசித்தியில் பூரண நம்பிக்கையுடனும், பள்ளிக் கூடத்தில் ஓடி ஓடி வேலை பார்த்த கல்யாணியை இப்போது நினைவு படுத்திக் கொண்டேன். அகன்று விசாலமான கனவுக் கண்கள். சதா சுறுசுறுப்பாக ஏதாவது வேலை பார்த்த கரங்கள், எந்நேரமும் புன்னகை பூத்த முகம் - இவை யாவும் கூடிய அந்தக் கல்யாணியுடன் இப்போது என் எதிரே உள்ள கல்யாணியை ஒப்பிட்டுப் பார்த்தேன் - கல்யாணி குடும்பத்தில் பெற்ற சுகத்தினாலா இவ்விதம் மாறிப் போயிருக்கிறாள்?

இன்னும் குழந்தை பிறக்கவில்லையாம். அப்படி இருந்தாலாவது சில பெண்களுக்கு உடற்கட்டுக் குலைந்து போகும் என்று சொல்லலாம். என்னவோ பாவம்! அவள் சந்தோஷமாக இருந்தால் சரி.

அம்மாவிடம் பேசிவிட்டு என்னிடம் பேச்சுக் கொடுத்தாள். அதுவும் அம்மா காபி போட்டுக்கொண்டு வரப்போன அவசரத்தில் தான் கொஞ்ச நேரம் கிடைத்தது. இனி அம்மாவுக்குக் கவலை இல்லை; நான் வெளியே போன நாட்களிலெல்லாம் கல்யாணி வீட்டிற்குப் போய் இஷ்டப்படிப் பேசிக்கொண்டிருக்கலாம்.

அம்மாவின் கை சும்மா இருக்காது. கூடமாட அவளுக்கு வீட்டு வேலைகளில் ஒத்தாசை செய்யக்கூடக் கிளம்பிவிடும்.

என்னைப்பற்றி விசாரித்துவிட்டு ''நீங்கள் இன்னும் உங்கள் திட்டத்தின்படியே போய்க்கொண்டிருக்கிறீர்கள். உங்களைப் போலப் பலர் இருப்பதால்தான் வாழ்க்கை ஓர் உருவத்துடன் இருக்க முயலுகிறது. ஆனால் உங்களுடைய துறையில் இன்னும் எத்தனையோ பேர் வேண்டும்'' என்றாள் கல்யாணி.

இன்னும் அவளுடைய பழங் கனவுகள் மறையவில்லை என்று இந்தப் பேச்சிலிருந்து தெரிந்தது.

''நீங்கள் எல்லாம் ஆண்பிள்ளைகள். உங்கள் இஷ்டப்படி வாழ முடியும். ஆனால் எங்கள் விஷயம் அப்படி இல்லை. என்னதான் படித்திருந்தாலும், என்னதான் தனித்து முன்னுக்கு வர முயன்றாலும் அது முடிவதில்லை. ஆண்கள் சமூகம் மாத்திரமல்ல; இயற்கையே எங்களை வஞ்சித்து விட்டது'' என்றாள்.

''இயற்கை வஞ்சிக்கவில்லை. அதற்கு யாரிடமும் பாரபட்சம் இல்லை. ஆண்களின் ஆண்மையைப் பரிபூரணமாக நம்பி அது பெண்களை அவர்களிடம் ஒப்பித்திருக்கிறது. பலம் பொருந்திய ஒரு வர்க்கத்தின் அதீதப் போக்குக்கு இயற்கை காரணம் அல்ல' என்றேன்.

இந்த விதமான பேச்சு, கல்யாணியிடமிருந்து வந்தபோது அவள் தொனியில் மறைமுகமான கோபம் ஒலித்தது. இதற்கு என்ன காரணம்? பொதுப்படையான பேச்சென்றாலும் இதற்குள் ஏதோ ஒளிந்து கிடந்தது.

வயசாகிவிட்ட மனிதர்களுக்குச் சில சந்தர்ப்பங்களின் விளைவுகள் பற்றி ஒன்றுமே தெரியாது போலிருக்கிறது. என் தாயைப் பொறுத்தவரை இது முற்றும் உண்மை. பல தடவைகள் சந்தர்ப்பம் தெரியாமல் ஏதாவது குறுக்கே பேசிவிடுவார்கள்.

''கல்யாணி, உன் கல்யாணப் பத்திரிகை வந்த அன்றைக்கு, பாலுவிடம் கல்யாணப் பேச்சை எடுத்துக் கொண்டிருந்தேன். ''இதோ பார் அம்மா, நான் பண்ணிக் கொள்ள நினைத்திருந்த கல்யாணிக்கு இன்றைக்குக் கல்யாணம். ஆகையால், இனி அந்தப் பேச்சை எடுக்க வேண்டாம். எனக்குப் பிடித்தபோது நானே சொல்கிறேன், என்று வாயை அடைத்து விட்டான். ஏன், கல்யாணி,

உனக்கு உன்னைப்போல் ஒரு தங்கை கல்யாணமாகாதவள் இருக்கிறாளா?'' என்று கேட்டுவிட்டார்கள்.

கல்யாணி என்னைத் திரும்பிப் பார்த்தாள். புரியாத கேள்விகளை அவள் பார்வை என்னைக் கேட்டுக்கொண்டிருந்தது. 'இது உண்மைதானா? உங்கள் உள்ளத்தில் அத்தகைய இடம் எனக்கு அளித்திருந்தீர்களா? அப்படியானால் ஏன் என்னிடம் அப்போதே தெரிவிக்கக் கூடாது?' என்று அந்தப் பார்வை கேட்பதாக நான் கற்பனை செய்து கொண்டேன். அந்தப் பார்வையின் கருத்து வேறு எப்படியும் இருக்கலாம். எந்தக் கருத்தில் என்னை விழித்துப் பார்த்தாளோ?

அவள் போய்விட்டாள். காலேஜில் நடந்த சம்பவம் ஒன்று ஞாபகம் வருகிறது. ஏன் அது இந்தச் சமயத்தில் ஞாபகத்திற்கு வரவேண்டும்? ஏனோ?

குறுகலான மாடிப்படி வழியாக, பலத்த யோசனையுடன் திடுதிடுவென வேகமாக இறங்கி வந்துகொண்டிருந்தேன். சங்கத்தில் ஒரு கூட்டம். அதை நடத்துவதைப் பற்றி அவர்களிடம் சில யோசனைகள் கேட்க வந்து கொண்டிருந்தேன். படிக்கட்டின் மத்தியில் ஒரு திருப்பம். அதில் திரும்பும்போது 'படீ'ரென்று ஒரு சத்தம் கேட்டது; நெற்றியில் 'சுரீர்' என்று வலி எடுத்தது. எதிரே தன் நெற்றியில் கை வைத்துக் கொண்டு நின்றாள் கல்யாணி! அவளை அறியாமல் அவள் வாயிலிருந்து, ''ஹா...!'' என்ற சத்தம் வந்துவிட்டது.

சீக்கிரம் நெற்றி புடைத்துப் போகும்போல் இருந்தது. ''நெற்றியை அழுந்தத் தேய்த்துக் கொள்ளுங்கள், கல்யாணி; யோசனை செய்தீர்களோ, வீங்கி விடும். இல்லாவிட்டால் நானே தேய்க்க வேண்டி வரும்!'' என்றேன் சிரித்துக்கொண்டு.

''முதலில் உங்கள் நெற்றியைக் கவனியுங்கள்; பிறகு எனக்கு உதவி செய்யலாம்'' என்றாள் கேலியாக.

மறுநாள் வகுப்பிற்குள் நுழையும்போது முதல் முதலாக ஒருவர் மற்றவர் நெற்றிப் பார்த்துக் கொண்டு எங்களுக்குள் சிரித்தோம்.

## 10

### கல்யாணி

கடலிலே மழை பெய்யும்போது அவன் இருதயத்தின் வெகு ஆழத்தில் உறங்கிக் கிடக்கும் முத்துச் சிப்பி, உறக்கம் கலைந்து

பரபரப்போடு மழை நீரின் ஒரு துளியைப் பருகுவதற்காகப் படுவேகமாய் மேற் பரப்புக்கு வருமாம். அதைப்போல என் மனசின் அதள பாதாளத்தில் அழுந்தி முழுவதுமே மறைந்துபோன ஓர் எண்ணம் புத்துயிர் பெற்றுக் குபுகுபுவென்று மேலே வருகிறது. எதை நான் நினைக்கக் கூடாதோ, எதை நான் நினைக்க என் மனசார விரும்பவில்லையோ, அதை நினைக்கிறேன். நம் விருப்பு வெறுப்புக்கள் அவற்றில் கலந்திருந்தாலும், இவற்றிற்குக் கட்டுப் படாதவை நம் எண்ணங்கள். நமது அடக்குமுறை அவற்றிடம் எதிரான பலனைத்தான் தருகிறது.

பாலு! - பள்ளிக்கூட வாழ்க்கையில் நான் யாரிடமும் உள்ளத்தை நழுவ விடக் கூடாது என்ற திட சங்கற்பத்துடன் இருந்தது வாஸ்தவமே. பலவித காரணங்களால் அப்படி இருந்தேன். கடைசி வயில் அதில் நான் வெற்றி பெற்றதாகக் கூட நினைத்து மகிழ்வடைந்தேன். ஆனால் உண்மை அதுவல்ல. அந்த வெற்றியும், அந்தச் சந்தோஷமும் என்னை நானே ஏமாற்றிக் கொண்டதால் வந்த விளைவு. நெஞ்சு பலவீனமாக இருப்பதால் நான் இப்படி நினைப் பதாகக் கொள்ள வேண்டாம். என் கல்யாணத்திற்குப் பத்திரிக்கை அனுப்பப்பட்ட ஆண் நண்பர் பாலு ஒருவர் தாம். அதுகூட ஏன் அனுப்பியிருக்க வேண்டும்?

என்னை அறியாமலே பாலுவைப்பற்றித் தனிமையில் நினைத்திருக்கிறேன். அவர் செயல்களைக் கண்டு பெருமையும் வியப்பும் கொண்டிருக்கிறேன். அன்று அவர் தாய் அந்த விஷயத்தைப் பற்றிச் சொன்னபோது எனக்கு எப்படி இருந்தது தெரியுமா? கோடை வெயிலில் நின்று கொண்டிருந்தவள்மேல் பன்னீர் மழை பொழிந்தாற்போல் உணர்ந்தேன். என்றோ ஒரு நாள் பல வருஷங்களுக்கு முன்பு கல்லூரியில் எதிர்பாராத விதமாய் ஒருவர் நெற்றியில் மற்றவர் மோதிக் கொண்டோமே, அந்த இன்ப வலி எனக்கு அப்போது நெற்றியில் ஏற்பட்டது.

அவரைப் பார்த்துச் சாதாரணமாகப் பேசி வந்தால் கூட இம்மாதிரி எல்லாம் நான் நினைத்திருக்க மாட்டேன். ஆனால் அவருடைய தாய் ஒரு பெரிய ரகசியத்தைச் சர்வ சாதாரணமாக என் முன் திறந்து காட்டி விட்டார்கள். எனக்கு மூடி வைத்திருந்த அவரது இறுகிய உள்ளம், அவர்களுடைய அந்த வார்த்தையான - கோடாரியால் என் முன்னேயே பிளக்கப்பட்டு 'பொல பொல'வென உதிர்ந்து விட்டது. பாலு செயலற்றுப் போன பரிதாபகரமான தோற்றத்தில் அப்போது உட்கார்ந்திருந்தார்.

பெண்கள் மனத்தின் ரகசியத்தைப்பற்றி ஆண்கள் பிரமாதமாகப் பேசுகிறார்கள்: இருளும், பயங்கரமும், ஆழமும், மென்மையும், வன்மையும் கூடியது என்றெல்லாம் கதைக்கிறார்கள். ஆனால் பாலுவைப் போன்ற ஆண்களின் மனசு? நினைவு உதிக்கும் முன்பே முகத்திலும் செயலிலும் அவற்றைக் கொட்டித் துடிக்கும் எண்ணற்ற ஆண்களின் மத்தியிலே பாலுவைப் போன்றவர்களும் இருக்கத் தானே இருக்கிறார்கள்?

''உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாமென்று நினைத்தானாம்!'' என்று அம்மா கூறிய சொற்கள் இன்னும் என் செவிகளில் ரீங்காரம் செய்கின்றன... 'ஐயோ, பாலு அப்படி நினைத்தீர்களா?' நினைத்ததைச் சொல்லியிருக்கக்கூடாதா? எவ்வளவு தூரம் நெருங்கிப் பழகினோம்! நான்கூட இயற்கையாகக் கொண்டிருந்த முடிவைத் தங்களுக்காக மாற்றிக் கொண் டிருப்பேனே...!

சே! நான் நினைப்பதெல்லாம் தவறு! மகா பாதகம். இந்தப் பாவ நினைவுகளைக் கண்டு நெஞ்சு பதைக்கிறது. நான் இப்போது இன்னொருவருக்குச் சொந்தமானவள். அணுவளவுகூட என்னிடம் மற்றொருவருக்கென்று கொடுப்பதற்கு ஒன்றும் இல்லை. அப்படி இருக்கையில் ஏன் இந்த குழப்பம்? என்னால் பொறுக்க முடிய வில்லையே! கொஞ்ச நஞ்சம் இருப்பதாக கற்பனை செய்து கொள்ளும் அமைதியையும் இது குலைத்துவிடும் போல் இருக்கிறதே! - இவர் ஏன் இங்கே குடிவந்தார்? ஏன் இந்த அம்மா பழைய கதையை இங்கே தொடங்கினார்கள்? - கல்யாணி, நீ முரு கேசனின் மனைவி! கல்லென்றாலும் கணவன்; புல்லென்றாலும் புருஷன்' என்ற சம்பிரதாயக் கோட்பாட்டிலே இயங்கிவரும் ஒரு சமூகத்தில் மனைவியின் ஸ்தானத்தை வகிப்பவள்!

பாலுவின் தாய்க்கு அவளுடைய வீட்டில் பொழுது போவதில்லை. பாலுவும் எப்போதாவது இங்கே வருகிறார். மற்ற நாட்களிலெல்லாம் வெளியூரில் அவருக்கு வேலைகள். பாலுதாம் இந்தச் சில வருஷங்களுக்குள் எத்தனை பெரிய மனிதராகி விட்டார்! கூட்டங்கள், பேச்சுக்கள், பத்திரிகைகள் இவற்றில் மாத்திரம் அவருக்கு முக்கியமான இடம் இல்லை. உண்மைத் தொண்டுக்கு

முதலில் நிற்பவர். உடல் உழைப்பால் நடைமுறையில் சேவை செய்து காண்பிப்பவர்.

அவருடைய தாயைப் பற்றியல்லவா கூறவந்தேன்? அவருக்குத் தினந்தோறும் அநேகமாக இங்கேதான் வேலை. தம்முடைய ஐம்பது வருஷ அநுபவங்களையும் கொஞ்சங் கொஞ்சமாய் ஒவ்வொரு நாளும் கதைபோலச் சொல்லி வருவார். வயசுதான் அதிகமாகிறதே தவிர வேலையில் ஒன்றும் குறைவில்லை. அவர் கரம் ஒரு நாளாவது சும்மா இருக்கக் காணோம். சின்னஞ் சிறு பெண்போல் ஓடி ஓடி வேலைகள் செய்கிறார். என்னைத் தனியே எந்தக் காரியமும் செய்ய விடுவதில்லை. நான் வேண்டுமென்று கோபித்துக் கொண்டால்தான் சற்று நேரம் நிம்மதியாய் இருக்கிறார்.

''நான் பெரிய இடத்தில் பிறந்தவள்; பெரிய இடத்தில் வாழ்க்கைப் பட்டவள். சொத்து நிறைய இருக்கிறது. என்றாலும், இந்தக் காலத்தில் ஆளை மினுக்கி அலங்காரம் செய்துகொள்வதும், சோம்பேறித்தனமாய் ஆடம்பரத்தில் ஊறிப்போவதும்தான் பெரிய இடத்துக்கு அந்தஸ்து என்று நினைக்கிறார்களே; அப்படியெல்லாம் எனக்கும் எங்கள் குடும்பத்துக்கும் எப்போதும் இல்லை. இன்றைக்கும் சரி, என் வேலையைப் பிறர் செய்ய விடமாட்டேன். உடம்பில் தெம்பு இருக்கிற வரையில் நான் தான் செய்து கொள்வேன்'' என்பார்.

''சொத்தில் கால்வாசிக்குமேல் பாலு கரைத்துவிட்டான். அதுகூட எனக்குக் கவலை இல்லை. எல்லாச் சொத்தும் போனாலும் போகிறது. இன்னும் அவன் கல்யாணத்தைப் பற்றியே நினைக்காமல் இருக்கிறானே என்ற ஏக்கந்தான் என்னை வாட்டுகிறது. ஆனால் தாயின் இந்த ஏக்கத்தைப் பற்றியெல்லாம் அவன் எங்கே சட்டை செய்கிறான்?

''என்னுடைய ஒன்றுவிட்ட தமையன் இவனுக்காகத் தன் பெண்ணை அருமையாக வளர்த்து வைத்திருந்தான். எல்லோரும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம். பிடிவாதக்காரன்! இப்போது அந்தப் பெண் வேறு ஒருவனிடம் சுகமாக வாழ்கிறாள். கையில் தங்கப் பதுமைபோல் ஒரு குழந்தை இருக்கிறது. இந்த வயசில் நான்

தனியாகக் கிடந்து கஷ்டப்பட வேண்டுமா, எனக்கு மருமகள் வேண்டுமென்கிற ஆசை, பேரக் குழந்தையைத் தூக்கிக் கொஞ்சும் ஆசை இருக்காதா? கல்யாணி, நீயே சொல்?'' என்று கண்களில் நீர் ததும்பக் கூறினார்.

நானும் பெருமூச்சு விட்டேன். இப்போது அவருக்கு மனைவி இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! அவர்களுக்கு மட்டிலும் அல்ல; எனக்குக்கூட அதில் அளவற்ற ஆனந்தந்தான்! - நிரம்பி வழியும் தண்ணீர் பக்கத்தில் பள்ளம் இருப்பதால்தானே அதை நோக்கி ஓடுகிறது? அங்கும் நிரம்பியிருந்தால்...?

# 11

## முருகேசன்:

சந்தோஷப்படுவதா, துக்கப்படுவதா என்று தெரியவில்லை. சிநேகிதர்கள் கூட்டம் இப்படித் திசைக்கு ஒன்றாய்க் கலைந்து விட்டது. ராமசாமி காரியாலயத்தில் சண்டை போட்டுக்கொண்டு வேலையை விட்டே ஓடிவிட்டான். ஓடினானே, என்னிடம் சொல்லிக்கொண்டாவது போனானா? அல்லது போய்த்தான் எங்கிருக்கிறேன் என்று கடுதாசு போட்டானா? இருநூறு ரூபாய்க்கு மேல் அவன் எனக்குத் தரவேண்டும். ஒருவேளை அதற்குத்தான் இந்த விதமாக இருக்கிறானோ! என்ன சிநேகிதம் வேண் டியிருக்கிறது?

ஜம்பு காரியக்காரன் ஆகிவிட்டான். நான் கல்யாணம் செய்து கொண்டபோது பிரமாதமாகக் கேலி செய்து நகைத்தான். கடைசியில் அவனும் அந்த வலையில் விழவேண்டியதாய்ப் போய்விட்டது. இதுவரையில் நன்றாகத்தான் இருந்தான். கல்யாணத் தினால் அவன் போக்கு ஒன்றும் மாறவில்லை. இந்தச் சில மாதங்களில்தான் ஏதோ ஒன்று நடந்திருக்க வேண்டும். எப்படியோ அவன் மனம் மாறிவிட்டது. வீட்டை விட்டு வெளியே வருவ தில்லை. என்னிடம் கலகலப்பாகப் பேசுவதில்லை. சுந்தரியின் வீட்டுப் பக்கத்தை அடியோடு மறந்தே விட்டானாம்.

அன்றைக்குச் சுந்தரி சொன்னாள். ''நீங்களும் என்னைக் கை விட்டு விடாதீர்கள். உங்கள் நண்பர் ஜம்புவுக்கு இந்த வீடே

மறந்துவிட்டது. இந்த ஊரில்தானா இருக்கிறார் என்றே தெரியவில்லை. வீட்டோடு ஐக்கியமாகி மாமனார் வீட்டில் நல்ல பிள்ளை என்ற பட்டம் எடுக்கிறார்போல் இருக்கிறது! இனி எனக்கு நீங்களேதாம். ஆமாம், நீங்கள்தாம் எனக்கு எல்லாம் - நான் சொல்வது புரிகிறதா! ஆபீஸ் விட்டவுடன் நீங்கள் நேரே இங்கு வரவேண்டும். இங்கிருந்துதான் திரும்பவும் போகவேண்டும். இனிமேல் உங்களுக்கு இதுதான் 'வீடு'' என்று ஆத்திரத்தோடு பதறினாள்.

சுந்தரி இப்போது என்னையே முற்றும் சுற்றிக்கொண்டாள். அவளுக்கு நான்தான் முழுக்கவும் ஆதாரமாம்! இது எனக்கும் அவளுக்குமே புதிய அநுபவம். இப்படி இருப்பதில் எனக்குத் தனி மகிழ்ச்சி கூட ஏற்படுகிறது. பார்த்த நிமிஷத்தில் வெறிகொள்ளச் செய்யும் இந்த அழகி எனக்கே முழுக்க முழுக்கச் சொந்தம்...! ஆனால், ஆனால்... வீட்டில் ஒருத்தியை வீணாகக் கட்டிப் போட்டு விட்டார்களே! இங்கிதம் தெரியாத ஒரு கர்வியை என்னுடன் பிணைத்து வைத்து விட்டார்களே!

எந்நேரமும் சுந்தரியின் வீட்டில் தங்குவதென்பது சகிக்க முடியாத விஷயம். இதுவரையில் இருந்த ஏற்பாடு அதற்கு விரோதம் செய்திருக்கிறது. அல்லாமலும் ஊரார் கண்களுக்கு அது மோசமாகப் படும்.

எப்படியோ பார்ப்போம். கல்யாணிக்கும் ஓர் எதிர்வீட்டுக் கிழம் துணைக்காக வந்து பழியாய்க் கிடக்கிறது. முன்பு ஒற்றைப் பிசாசு மாதிரி வீட்டில் கிடந்தவளுக்கு, இப்போது அவளையே ஆட்டி வைப்பதற்கு அந்தப் பெரும் பிசாசு வந்துவிட்டது. நமக்கும் இதனால் தொந்தரவு குறைவு - சுந்தரி, இரத்தம்போல் சிவந்த என் அருமைப் பூவே. இனி நீ எனக்கே உரியவள்! முருகேசனின் சுந்தரி நீ.

## 12

**பாலசந்திரன்:**

**ப**த்திரிகையில் நடராஜனின் பெண் சாந்தாவின் படம் வந்திருக்கிறது. மாகாணத்திலேயே தமிழில் முதன்மையாகத்

தேறியிருக்கிறாளாம். பத்திரிகையைப் பார்த்த பிறகுதான் எனக்கு இது தெரியவந்தது. நடராஜனின் பெயரும் விலாசமும் போடாவிட்டால் எனக்குத் தெரிய வழியில்லை. இதுவரை அவர் படித்துக் கொண்டிருக்கும் தம் பெண்ணைப் பற்றி ஒன்றும் கூறவில்லை என்று நினைக்கிறேன். நானாகப் பத்திரிகைச் செய்தியைக் குறிப்பிட்டுச் சின்னப்பட்டிக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

பெண்கள் நன்றாகப் படிக்கிறார்கள். முதன்மையாகவும் தேறுகிறார்கள். ஆனால், தாய்மொழி தவிர மற்ற விஷயங்களில்தான் அவர்களுடைய முன்னேற்றம் இருக்கும். மாணவர்களிடம் ஆங்கிலம் அடிபடுவதைவிட அவர்களிடந்தான் அதிகம் அகப்பட்டு விழிக்கிறது. நாடு கொஞ்சம் விழிப்புக்கொண்ட நிலைமைக்கு வந்த பிறகும் இந்த மேலை நாட்டுப் பித்து ஏனோ நம் பெண்களை விட்டு விலகுவதில்லை. சாந்தா என்பவள் இந்த விஷயத்தில் விலக்குப் போலும்! யார் கண்டார்கள்? அவள் கூடத் தமிழில் நன்றாகப் படித்தும் எழுதியும் இருக்கலாம். ஆனால் அதே சமயம் ஆங்கிலத்தை அழகாகப் பேசிக் கொண்டிருப்பதிலும் பெருமை கொண்டவளாக இருக்கலாம்.

சாந்தா இருக்கட்டும். கல்யாணியின் விஷயம் அம்மா சொல்லத்தான் எல்லாம் விளங்குகிறது. கல்யாணி என்னிடம் தன் குடும்பத்தைப் பற்றி ஒரு விவரமும் கூறவில்லை. என்னிடம் என்ன? அம்மாவிடமும் அவள் தானாக வாய்விட்டு ஒன்றும் சொன்னதில்லையாம். அங்கு நடக்கும் எல்லாக் காரியங்களையுந் தான் அம்மா உடனிருந்து கவனித்து வருகிறார்களே!

அம்மாவுக்குப் பல இடங்களிலிருந்தும் செய்தி வந்து விடுகிறது. கல்யாணியின் கதையைக் கேட்கச் சகிக்கவில்லை. ஒரு பெண்பிள்ளை அதிலும் கல்யாணியைப் போன்ற போக்குப் படைத்தவள், எப்படித்தான் இந்தத் துயரைத் தாங்குகிறாளோ!

எப்போதாவது என்னைப் பார்த்தால் அவள் சிரித்துக்கொண்டுதான் பேசுகிறாள். ஆனால் அவள் கண்கள் சிரிக்கவில்லை; அவள் உள்ளம் சிரிக்கவில்லை. அவள் வாய் சிரிக்கும்; அந்த வெளிச்

சிரிப்பிலும் உயிரில்லை. துயரம் அவளைத் தின்றுகொண்டு வருகிறது. காலத்தினால் பழுதுபட்ட தங்க விக்கிரகம்போல் அவள் ஆகிக்கொண்டு வருகிறாள். முதல் நாள் இங்கு வந்து அன்று அவளைப் பார்த்தபோது அவள் உருவம் சொல்லிய சோகக் கதை இப்போதுதான் எனக்குப் பளிச்சென்று புலனாகிறது.

ஆனால் ஒரு சந்தேகம்; இந்தச் சில மாதங்களில் அவளிடம் அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதுபோல் தெரிகிறது. அடிக்கடி நான் வெளியூர் சென்று வருவதால் இந்த மாற்றத்தைக் கண்டு கொள்கிறேன். நாளுக்கு நாள் அவள் உடலில் அதிக உயிர் ஊசலாடி வருகிறதென்பதில் சந்தேகம் இல்லை.

அம்மாவே இதுபற்றி என்னிடம் கூறினார்கள்; ''நான் அங்கே போய் அவளுக்கு அநுசரணையாய்ப் பேச்சு வார்த்தை கொடுத்துக் கொண்டிருப்பதில்தான் கொஞ்சம் கொஞ்சம் தேறிவருகிறாள். இது எனக்கே தெரிகிறது. அவளும் சொல்லுகிறாள். பக்கத்து வீட்டுக் கிளரிகூட, 'பாட்டி, நீங்கள் திடீரென்று இப்படி இங்கே தோன்றியிருக்காவிட்டால் கல்யாணிக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்திருக்கும். என்னுடன் பேசுவதே ஒரு நாளைப்போல் உற்சாகமாக இருக்காது. நீங்கள் வந்து ரொம்பவும் கல்யாணியை மாற்றி வருகிறீர்கள்'' என்றாள்.

எனக்கும் குடும்பத்தில் மனைவியோடு வாழும் அனுபவம் இன்னும் ஏற்படவில்லை. இருந்தாலும், அம்மா சொல்லுகிற தெல்லாம் உண்மையாயிருந்தால், கல்யாணியின் கணவன் மனித சுபாவமற்ற ஒரு வெறியனாகத்தான் இருக்க வேண்டும். மனைவி ய்யைக் கணவன் அடிப்பதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அதை நினைக்கும் போதே மிக அருவருப்பான எண்ணந்தான் எனக்கு உண்டாகிறது. எதனால் அடிக்கிறான்? தவறு செய்வதற்காக, குற்றமிழைப்பதற்காக, வேண்டுமென்ற பிடிவாதத்திற்குத் தண்டனையாக என்று பல காரணங்களைச் சொல்லலாம். அதை நான் கேட்கவில்லை. அடிப்பதற்குக் காரணம் ஒன்றே ஒன்றுதான்; பெரும்பாலும் பெண்ணைக் காட்டிலும் ஆணுக்கு அதிக மிருக பலத்தை இயற்கை அளித்திருப்பதுதான். இதை அவன் துஷ்பிர

யோகம் செய்கிறான் என்பதைத் தவிர வேறு எந்த அடிப்படைக் காரணமும் இருக்க முடியாது.

தவறுகள் நிகழ்வது சகஜம். தெரிந்தும் தெரியாமலும் செய்யப் படுபவை; சில தவறுதல்கள் தெரிந்தே செய்ய வேண்டியிருக்கும். இதற்குப் பரிகாரம் தன் மனைவியை ஓர் ஆண்பிள்ளை அடிப்பது தானா? அவன் செய்யும் தவறுகளுக்கு யார் பொறுப்பு? புருஷன், தான் செய்யும் தவறுகளுக்கே மனைவிக்குத் தண்டனை அளிக் கிறானே, அவனை எந்தவிதத்தில் சேர்ப்பது?

''அம்மா!'' என்று செல்லமாகக் கூப்பிட்டுக் கொண்டே அன்று கல்யாணி குதித்தோடி வந்தாள். நான் அப்போதுதான் கிராமத் திலிருந்து திரும்பியிருந்தேன். இது அவளுக்குத் தெரிந்திருக்காது.

அறைக்குள் கண்ணாடி முன் நின்று முகம் துடைத்துக் கொண் டிருந்தவன், ஜன்னல் வழியே அவளைப் பார்த்தேன். சந்தோஷம் துள்ளிக் கொண்டிருந்த அந்த முகத்தில், பூரண சந்திரனைக் களங்கப்படுத்த வந்த கிரகணம்போல் கறுப்புக் கறை ஒன்று தெரிந்தது. நன்றாகப் பார்த்தேன். அவளுடைய செவ்விய கன்னத் தில் மூன்று விரல்கள் பட்டு ரத்தம் கன்றியிருந்தது. கண்ணாடியில் பட்ட என் பெருமூச்சுப் புகை அத்தோற்றத்தை மங்க வைத்தது.

அறைக்கு வெளியே வந்து ''ஏன் கல்யாணி, இது என்ன?'' என்றேன் பரபரப்புடன்.

என்னைக் கண்டவுடன் அவள் திகைத்துவிட்டாள். என் கேள்விக்கு ஒன்றும் பதில் இல்லை. ''நீங்கள் எப்போது வந்தீர் கள்?'' என்றாள் கன்னத்தைக் கரத்தால் மறைத்துக்கொண்டு.

கண்கள் கலங்கி விட்டன எனக்கு. அவளுடைய கன்னத்தை மறுமுறை சரியாகப் பார்க்க முயன்றபோது அவள் இல்லை. அம்மாவின் அறைக்குள் ஓடினாளோ தன் வீட்டிற்கே திரும்பவும் சென்று விட்டாளோ தெரியவில்லை.

நடந்த கதையை அம்மா சுருக்கமாகச் சொன்னார்கள்; முருகேசன் கல்யாணியை அவளுடைய கழுத்துச் சங்கிலியைக் கழற்றித் தரச் சொன்னானாம். ''நாளைக்குத்தான் முதல் தேதியாயிற்றே; சம்பளம் வந்துவிடுமே; அதற்குள் என்ன செலவு?'' என்றாளாம்.

''உன்னைக் கொடுக்கச் சொல்லியதே தவிர மறுவார்த்தை பேசச் சொல்லவில்லை'' என்று உறுமினானாம். கல்யாணி சங்கிலியைக் கழற்றிப் பக்கத்தில் இருந்த நாற்காலியில் போட்டாளாம்.

''கையில் கொடுக்க முடியாதபடி அத்தனை அகங்காரமா உனக்கு?'' என்று பளீரென்று கன்னத்தில் அறைந்தானாம்.

அறையின் சத்தம் வந்த சமயமும் அம்மா அங்கே போன சமயமும் ஒன்றாயிருந்திருக்கின்றன. கல்யாணி வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை. கண்ணீர் மட்டிலும் மணிமணியாக உதிர்ந்து கொண்டிருந்ததாம். அம்மா அந்த வேளையில் அங்கே சென்றிருக்காவிட்டால் இன்னும் என்ன என்ன வகையில் வதையோ!

பெண்ணுக்குப் பொறுமை அதிகம் என்று எழுதி வைத்திருக் கிறார்கள். ஆண்களுக்கு அந்தப் பொறுமையின் அளவைச் சிந்தித்துப் பார்க்கக்கூடப் பொறுமையில்லையே! பூமியினுள் பொறுமை உடையவளாம் அவள். ஆனால், என்றைக்காவது ஒருநாள் எங்காவது ஓர் இடத்தில் பூமி அதிர்ந்து, தன் உள்ளக் குமுறலைத் தாங்காது, எரிமலைக் குழம்புகளாய் வெளிப்பட்டு நெருப்பைக் கக்கினால்? ஏதோ ஒரு சமயம் அடிவயிற்றின் புயல் தாங்காது கடல் கரை கடந்து பிரளய காலத்து ஊழியப் பேயுடன் நர்த்தனம் செய்ய ஆரம்பித்து விட்டால் - அப்போது பெண்ணின் பொறுமை எங்கே?

## 13

### ஜம்புலிங்கம்:

சில மாதங்களுக்கு முன்பு வரை நான் வாழ்க்கையின் இருண்ட பகுதியில் இருந்து வந்திருக்கிறேன். அதை நினைக்க எனக்கே வெட்கமாக இருக்கிறது. எந்த எந்தக் காரியங்களில் அப்போது இன்பங் கண்டேனோ, அவையெல்லாம் இப்போது கசந்துவிட்டது. அன்று கசந்த பொருள்கள் இன்று ஒவ்வொன்றாய் எனக்குத் தம் இன சுவையை அளித்துத் தம் சுகத்தையும் கொடுக்கின்றன.

என் மனைவி மீனா என்னுடன் வாழ நேர்ந்திருக்காவிட்டால் நான் இந்நேரம் என்ன கதியில் இருந்திருப்பேனோ? இருந்தும் அவளால் என்னைத் திடீரென்று திருப்பிவிட முடியவில்லை.

அவளுடைய சக்தி மறைந்து கிடந்தது. தினசரி வாழ்வில் அவ்வப் போது வெளிப்படக்கூடிய அதைக் கண்டுகொள்ள முடியாதபடி நான் குருடனாயிருந்தேன். அந்தச் சக்தி அப்படி என் கண்களுக்குப் புலப்பட்டிருந்தாலும் அதை நான் அழிக்க முயன்றிருப்பேன். அது அழிக்க முடியாத ஒன்று; அழிப்பவரை அழிக்கும் ஒன்று - மீனா என்னைக் காப்பாற்றினாள்; என்னை மனிதனாக்கினாள்; வீடும் குடித்தனமும் எனக்கு ஆக்கி வைத்தாள். இன்றும் என் குலவிளக் காய், இன்முகங் காட்டி வீட்டின் சக்தியாக விளங்குகிறாள்.

நாலு மாதங்களுக்கு முன்பு நடந்த துக்ககரமான சம்பவம்; அது நடந்திருக்காவிட்டால், என் போக்கில் இந்தத் திருப்பமே ஏற்பட்டிராது. 'எல்லாம் நன்மைக்கே' என்ற வாய் வேதாந்தந்தான் என்னை இதுவரையில் சாந்தப்படுத்தி வருகிறது. இல்லாவிட்டால் அந்தக்கொடிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்தியதற்கு எனக்கு எதுவும் பிராயச்சித்தமே கிடையாது.

மீனா ஏழுமாதக் கர்ப்பிணி.

பெண்களின் தாய்மை நிலைபற்றியும், அதற்கு அவர்கள் தயாராகிக்கொண்டு வரும்போது அவர்களுக்கு இருக்கும் உடற் கூற்று விவரம்பற்றியும் இப்போது நான் தெளிவாகச் சிந்திக்கிறேன். கொஞ்சமாவது அதன் தன்மையைப்பற்றி என்னால் உணர முடிகிறது. அவர்களுக்கு அந்தச் சமயத்தில் எவ்விதமான பாதுகாப்பு வேண்டும், உதவிகள் தேவை என்றெல்லாம் இப்போது நான் பிறருக்குச் சொல்வேன். ஆனால் இன்றைக்கு உள்ள ஜம்புவல்ல நான் அன்று. அவன் வேறே; அவன் ஊதாரி; முருகேசன், ராமு முதலியவர்களுடன் சேர்ந்து வாழ்வைப்பற்றியே நினைக்காமல் திரிந்தவன்; சுந்தரியின் காமுகன். நல்ல வேளை. அவன் செத்து விட்டான். அவனைச் சாக வைத்து விட்டாள், அவன் அன்பு மனைவி மீனா. இப்போதிருப்பவன் அவளுடைய அன்பு நெருப் பிலே குளிப்பாட்டப்பட்ட ஜம்பு.

தினந்தோறும் புறப்படுவதுபோல் அவசர அவசரமாக ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். வண்ணான் வெளுத்த உருப்படி தீர்ந்துவிட்டது. அவள் துவைத்து வைத்திருந்த வேட்டியை எடுத்து உடுத்துக் கொண்டேன். நன்றாக வெளுக்காததுபோல் எனக்குத் தோன்றியது.

''ஏன் இப்படி அழுக்கே போகாமல் இருக்கிறது?'' என்று சத்தமிட்டேன்.

''முடிந்த வரையில்தான் துவைத்திருக்கிறேன். அதற்குமேல் நான் என்ன செய்வது?'' என்றாள்.

''என்ன செய்வதா? செய்வதைச் சொல்லுகிறேன் அப்புறம். இந்தா, நீயும் உன் வேஷ்டியும்!'' என்று முகத்தில் வீசி எறிந்தேன்.

''ஏன், அவளைப் போய் இப்படி அதிகாரம் பண்ணுகிறது தானே?'' அவளிடம் துவைத்துத் தரச் சொல்லுகிறதுதானே?''' என்று கத்தினாள்.

அப்போது தான் சுந்தரியின் வீட்டிலிருந்து வந்திருந்தேன். அதைக் குத்திக் காண்பிக்கத்தான் இப்படிப் பேசுகிறாள் என்று அறிந்து, ''அவளையா? அவளைப் பற்றிக் கேட்க நீ யார்?'' என்று உறுமினேன்.

பக்கத்திலே என்ன கிடக்கிறது என்று நிதானித்துப் பார்க்க வில்லை. கையில் எடுத்து ஓங்கி அவள் மண்டையில் அடித்தேன்.

''ஹா!'' என்ற பெரிய அலறல், என்னையே அந்தச் சத்தம் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. மத்தியில் வகிடு எடுத்தாளே, அதன் வழியாக ரத்தம் வழிந்து அவள் நெற்றியில் கொட்டியது, அவள் கீழே விழுந்தாள். நான் உன்மத்தனாகி அதே இடத்தில் அவளைப் பார்த்துக் கொண்டு நின்றேன்; எத்தனை நிமிஷங்கள் நின்றேனோ அப்படி!

எங்கள் வீட்டில் இதற்கு முன்பு இதைப்போல் அடியும் அழுகையும் சகஜம். ''பிள்ளைத்தாய்ச்சிப் பெண்ணை அடிக்காதே தம்பி'' என்று அடுத்த வீட்டுக்காரர்கள் சொல்லியும் இருக்கிறார்கள். அவர்களே அலுத்துப்போய், ''பாவம், இந்தப் பெண் இவன் கை யாலேயே உயிரை விடத்தான் போகிறாள்'' என்று என் காதில் விழும்படி பேசிக்கொண்டதும் உண்டு.

அன்று அந்த அண்டை வீட்டுக்காரர்கள் எல்லாம் எனக்கு எமனாய் முளைத்துவிட்டார்கள். அருகிலிருந்த போலீஸ் ஸ்டேஷனி லிருந்து அவர்களுடைய உதவியால் இரு ஜவான்கள் தயாராய்

என்னை அழைத்துச் செல்ல வந்துவிட்டனர். போலீஸ் கையில் என்னைப் பிடித்துக் கொடுத்த பிறகும் அவர்கள் ஆத்திரம் அடங்க வில்லை. ''கொலைகாரன், பாவி! இவனுக்கெல்லாம் பெண்டாட்டி எதற்கு? பிள்ளை எதற்கு...?'' இன்னும் காது கொடுத்துக் கேட்க முடியாதபடி பேசினர்.

அவளுடைய உதவிக்குப் பலர் வந்தனர். நீர் விட்டு அலம்பி அவள் தலையில் ஈரத் துணியைப் போட்டுக் கொண்டிருக்கும்போது என்னை ஒரு முறை கண்களை விழித்துப் பார்த்தாள். என், இரு பக்கமும் போலீஸ் நிற்பதைக் கூர்ந்து கவனித்தாள். அவள் பார்வை எனக்கு மிகப் பயங்கரமாக இருந்தது. இதுதான் அவளுடைய கடைசிப் பார்வை என்று தீர்மானித்தேன். மறுகணம் என் குற்றத் திற்காக நான் தூக்கு மரத்தில் தொங்குவதாக ஒரு கற்பனை உலுக்கியது.

ஏன் அப்படிப் பார்த்தாள்? அந்தப் பார்வையில் குறிப்பான ஒரு கருத்து இருந்தது. மயங்கி இறந்து விட்டாளோ என்ற நிலையில் இருந்த அவளுக்கு எந்தச் சக்தி அந்த அறிவைக் கொடுத்தது?

என்னைத் தனியே இழுத்துச் சென்று விட்டார்கள், 'லாக் அப்'புக்கு. அதற்கப்புறம் சம்பிரதாயத்தை ஒட்டிய சடங்குகள் உள்ளும் புறமும் தொடர்ச்சியாக நடந்தேறின. கடைசியாக என்னை நிரபராதி என்று விட்டு விட்டார்கள்.

காரணம் என்ன? நான் நிரபராதியா? ஆம்; அப்படி என்னைக் குற்றமற்றவன் ஆக்கிவிட்டாள் மீனா.

''அடி பாதகி! அவன் கையில் சாகும்படியான நிலைமை வந்துவிட்டது. இன்னும் சில நாளோ அல்லது மணிக்கணக்கோ தெரியவில்லை, அவள் சாவதற்கு. அப்படி இருந்தும் அந்தக் கொலைகாரப் பயலுக்கு பரிந்து பொய் சொல்லிவிட்டாளே! என்ன அக்கிரமம்!'' என்றனர் ஜனங்கள்.

''உத்தமனுக்குப் பெண்டாட்டியாய் வாய்க்க வேண்டியவள், ஊதாரிக்குப் போய் வாழ்க்கைப்பட்டு விட்டாள். விதி...பெண்ணா அவள்? பெண் தெய்வம்!'' என்றார்கள் இன்னும் சிலர்.

நான் எப்படி நிரபராதியாக ஆக்கப்பட்டேன், தெரியுமா? அவளிடம் வாக்கு மூலம் வாங்கினார்கள். அப்போது அவள் கூறினாளாம், ''எனக்கும் என் புருஷனுக்கும் ஒரு சண்டையு மில்லை. அடுக்களைக்கு மேல் இருந்த பரணிலிருந்து விறகு விழுந்துவிட்டது!'' என்று.

ஜனங்களைச் சொல்வதில் என்ன இருக்கிறது? இந்த உத்தமி என்னைப் போன்ற கசடனுக்கு மனைவியாய் வாய்க்க வேண்டிய வளா?

ஆஸ்பத்திரியில் இரண்டு மாதங்கள் உயிருக்கு மன்றாடி வெற்றி பெற்றாள். அப்போது அவளுக்கு மாத நிறைவு. மனித முயற்சி யாலும் என் மனப் போக்கின் திருப்பத்தாலும் மட்டும் அவள் பிழைக்கவில்லை. தெய்வந்தான் அவளுக்கும் அவள் வயிற்றுச் சிசுவுக்கும் உயிர் கொடுத்தது.

படுக்கையில் இருக்கும்போது என் மனமாற்றம் அவளுக்குப் பிரமிப்பைத் தந்திருக்க வேண்டும். இரவு பகல் அவளிடம் இருந்து அவளுக்கு வேண்டியவற்றைச் செய்து வந்ததைக் கண்டு அவள் வியப்படைந்திருந்தாள். ஒரு சமயம் இரவு பன்னிரண்டு மணிக்கு அவளருகில் நான் விழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

''உண்மையில் நீங்கள்தாமா இது? நான் கனவு காண வில்லையே!'' என்றாள்.

எனக்கு இதைக் கேட்டவுடன் இருதயத்தில் வலி எடுத்தது.

''கொஞ்ச நாளாய் ரொம்பவும் மாறிவிட்டீர்கள். எனக்காக உங்களைப் பற்றிகூடக் கவனிப்பதில்லை. - ஐயோ! எனக்கு இப்போது உங்களைப் பார்க்கும்போது என்ன ஆசை உண்டாகிறது தெரியுமா?''

''என்ன, மீனா?'' என்று முகத்தைப் பார்த்தேன்.

''நான் பிழைத்துக் கொள்ள வேண்டும் என்று துடிக்கிறேன். நீங்கள் இப்படிச் சொரியும் அன்பை ஏற்று நான் மறுபடியும் எழுந்து வந்து ஒரு நாளாவது மகிழ்வோடு குடும்பம் நடத்த விரும்புகிறேன். அந்த ஒரு நாளுக்குப் பிறகு நான் செத்தால் பரவாயில்லை'' என்றாள்.

கண்ணீர் அருவியாக எனக்குப் பெருகியது.

''நீ கட்டாயம் பிழைத்துக் கொள்ளப் போகிறாய் மீனா. டாக்டக்கும் பூரண நம்பிக்கை. நீ வேறொன்றும் நினைக்காதே'' என்றேன்.

இப்போது, இரண்டு நாட்களுக்கு முன்பு என் கண்ணான ஒரு மாதத்துக் குழந்தையை வைத்து அவள் தனியே வீட்டில் கொஞ்சிக் கொண்டிருந்தாள்.

''கண்ணா! அதிருஷ்டசாலியடா! சாகக் கிடந்த உன் தாயையும் பிழைக்க வைத்து நீயும் பிழைத்துக் கொண்டாய். அதெல்லாம் பெரிதில்லை. உன் அப்பாவைத் தங்கமான அப்பாவாக ஆக்கி விட்டாயே; அதுதான் ரொம்பவும் பெரிய காரியம். எப்போதும் அவர் இப்படி இருந்தால் நமக்குக் குறைவே இல்லையடா!'' என்றாள், உணர்ச்சி பொங்க.

இதைக் கேட்டு உள்ளே நுழைந்த நான், அப்படியே இரு வரையும் சேர்த்து என் மார்பில் அணைத்துக் கொண்டேன். எனக்கு இந்த உலகத்திலே வேறெதுவுமே வேண்டாம். எங்கள் சிறிய குடும்பத்தைக் கடவுள் ஒரு துன்பமுமில்லாமல் காப்பாற்றட்டும்! அப்படியே என் நண்பர்களான முருகேசன், ராமு முதலியோருக்கும் நல்ல புத்திமதி கொடுத்து அவர்கள் குடும்பத்திற்கும் மகிழ்வை அளிக்கட்டும்!

## 14

### கல்யாணி:

ஹாஸ்டலில் நாங்கள் வசிக்கும்போது காந்தம் ஒரு நாள் எல்லோருக்கும் மத்தியில், ''பாரதி ரொம்பப் பொல்லாத மனுஷரடி! நம்முடைய வகுப்புப் பிள்ளையாண்டான்களுக்கு அவருடைய வீர தீரத் தேசியக் கவிதைகள்தாம் மனப்பாடம். அவை களை வைத்துக் கொண்டு மேடைமீது இல்லாத அட்டகாச மெல்லாம் செய்கிறார்கள். நான் படிக்கப் போகிற இந்தப் பாட்டை எல்லோரும் சிரிக்காமல், கோபங் கொள்ளாமல் கேளுங்கள். இதையெல்லாம் அவர்கள் படித்துவிட்டால், ஏது, நாம் வகுப்புக்குள் நுழையவே முடியாது!'' என்ற முன்னுரையுடன் ஆரம்பித்தாள்.

''கண்ணம்மா - என் காதலி' என்ற பகுதியில் நாணிக்கண் புதைக்கிற அந்தக் கட்டத்தைப் படித்துவிட்டுத்தான் வ.வே.சு. ஐயர் கூட அதன் முன்னுரையில் 'ஆசிரியரால் இந்தப் பாவத்தை வெளியிடும்போது தராசு முனையை நிலைநிறுத்த முடியவில்லை' என்று குறிப்பிட்டார் போலும்!

''பாரதியார் குறும்புக்காரர்!''

''பச்சை பச்சையாய்ப் பாடியிருக்கிறார்!''

''என்ன தைரியமடீ இவருக்கு இப்படிப் பாடுவதற்கு?''

இப்படிப் பலப்பல அபிப்பிராயங்கள் மாணவிகளிடமிருந்து அப்பாட்டைக் கேட்டபின் கிளம்பின. பாரதி ஒரு பெரிய கவி என்கிற அளவில் யாரோ சிலர் சொல்லுவதைக் கேட்டதுதான் இதுவரை பெரும்பாலானவர்களுக்குத் தெரியும். மாணவிகள் மட்டுமென்ன? மாணவர்களும் அப்படித்தான். ஒரு தரம் பாரதியை முழுக்கப்படித்தவனோ, படித்தவளோ அகப்படுவது அபூர்வம். ஆனால் முன் குறிப்பிட்ட கவிதைகளைப் படித்துக் காந்தம் நிறுத்தியவுடன், 'நான் முந்தி! நீ முந்தி! என்று ஏனோ அதை வாங்கித் தனியாகப் படிக்க அவர்கள் போட்டியிட்டார்கள்.

இந்தச் சமயத்திலே அந்தப் பாட்டின் ஒரே அடியை மட்டிலும் திரும்பத் திரும்ப என் வாய் முணுமுணுக்கிறது. பழைய உற்சாகமும் உள்ளக் குறுகுறுப்பும் அந்த முணுமுணுப்பில் இல்லை. அதற்கு நேர் எதிரிடையான பாவத்தில் அதை நான் இன்று ஸ்மரிக்கிறேன்.

**''கன்னி வயதிலுனைக் கண்டதில்லையோ - கன்னங்**
**கன்றிச் சிவக்க முத்த மிட்டதில்லையோ?''**

கண்ணாடி முன் அமர்ந்திருந்தேன். கண்களில் நீர் வழிந்தது. மேலே குறிப்பிட்ட பாட்டை - இல்லை, அந்த அடியின் பிற்பகுதியை - முனகினேன்.

**''கன்னங் கன்றிச் சிவக்க முத்த மிட்டதில்லையோ?''**

என்னுடைய இருதயத்தை அந்தப் பாவி-கடவுள் ஏன் கற்பனை நிரம்பியதாகச் செய்துவிட்டான்? சதா துன்பத்தின் அருகே இன்பப்

பெருவெள்ளியின் எழிலைக் காட்டி, என் துன்பத்தை எண்ணற்ற மடங்கில் எண்ணச் செய்து நடுங்க வைக்கிறானே!

ரோஜாவின் சிவந்த மெல்லிதழ், மாங்கனியின் சுவை, மிகுந்த மிருதுவான பகுதி என்றெல்லாம் வருணிக்கிறார்களே, அவ்வித மாக இருந்த என்னுடைய கன்னம் எதிரே கண்ணாடியில் தெரிந்தது. நான் சிரிக்கும்போது ஒரு சிறிய கன்னக்குழி சுழித்துச் சுழித்து ஓடும். ''கல்யாணி, நீ அதிருஷ்டக்காரியடி! சிரிக்கும்போது உனக்குக் குழி விழுகிறது'' என்று மாணவிகள் அப்போது கேலி செய்வார்கள். என் கன்னம் இப்போது அந்தக் குழியை மறந்துவிட்டது. சிரிப்பு அதற்கு ஞாபகம் இருந்தாலல்லவோ அதன் துணையைப் பற்றி நினைக்க முடியும்!

என் கன்னம் இப்போது கன்றியிருக்கிறது. இதைச் சொல்ல வெட்கமென்ன? என் கணவர் ஆசைதீர, 'கன்னங்கன்றிச் சிவக்க முத்தமிட்ட'தால் அல்ல; ஆத்திரம் தீர அறைந்த அந்த ஓர் அறையால்!

இந்த வடு முகத்தில் மறையும் வரையில் யார் முகத்திலும் விழிப்பதில்லை என்றிருந்தேன். பாலுவின் தாயிடம் இது பலிக்கவில்லை. அவர்களே அந்தச் சமயம் வந்து விட்டார்கள்.

இன்று அவர்களைக் கூப்பிட வீட்டிற்குப் போனால், அங்கே பாலு!

கன்னத்தைக் கண்டுவிட்டு அவர் பார்த்த பார்வை, அவர் முகத்திலே அந்தக் கணம் தோன்றிய துன்பம், அடித்து வைத்த கல்லாக நின்ற நிலை...ஐயோ! எந்த இருவரையும் ஒரே தளத்தில் வைத்து ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாதோ, அந்த இருவரையும் இன்று வைத்துப் பார்க்கிறேனே!

மத்தியானம் அரைத் தூக்கத்தில் கண்டேன்; அதைக் கன வென்றும் சொல்ல முடியாது; நனவென்றும் தள்ள முடியாது. இரண்டிலும் சேர்த்த, இரண்டிலும் சேராத நிலை அது.

முன்பு நடந்த அதே காட்சிதான். பாலுவின் வீடு, அவர் பார்த்த பார்வை, அவர் நின்ற நிலை - இன்னும் அத்துடன் கொஞ்சம் அதிகம்.

''ஏன் இந்த கோலம்?'' என்று கலங்கும் குரலால் கேட்டுக் கொண்டே, தம் நடுங்கும் கரத்தை என் கன்னத்தில் வைக்கிறார். என்ன சுகமாக இருக்கிறது! அந்த வலியைக் காணோமே! அந்த வடுக்கூட மறைந்துவிட்டதே! அப்போது நான் 'களுக்' என்று சிரித்தேன். வெகு காலமாக என்னைப் பிரிந்திருந்த என் கன்னக் குழிவு திரும்பவும் என்னை வந்தடைந்து என்னுடன் பதிலுக்குச் சிரித்தது.

நல்லவேளை! இது உண்மையாக நடக்கவில்லை. துன்பக் கனவா? இன்பக் கனவா? எக்கேடாவது கெட்டுப் போகட்டும். அந்த வலியும் வடுவும் இன்னும் இருக்கின்றன. இன்பமும் துன்பமும் கலந்த அந்த நினைவுகளும் இன்னும் தங்களுக்குள்ளே பிணங்கிக் கொண்டு நிற்கின்றன.

பாலு கதை ஒன்று சொன்னார். சமீபத்தில் நடந்தகதை.

கிராமங்களுக்கு வைத்திய சேவை செய்ய அவர் வைத்திய கோஷ்டி ஒன்று வைத்திருந்தாரல்லவா? அதில் டாக்டர் சுந்தரேசன் என்பவரும் அவர் மனைவி பங்கஜமும் இருந்தார்களாம். பங்கஜத்திற்கு வைத்திய தொழிலில் கணவருடைய பாதி அநுபவத்திற்கு மேல் இருந்தது. கிராமப் பெண்கள், சிறுகுழந்தைகள், முதியோர் முதலியவர்களுக்கு, டாக்டருடன் அவளும் சென்று சிகிச்சை செய்வாளாம். முக்கியமாகக் கிராமப் பெண்களின் பிரசவ உதவிக்கு பங்கஜத்தின் சேவை அதிகம் பயன்பட்டது.

உழைப்பு அங்கே அதிகமாகி விட்டது. இதைப் பங்கஜத்தால் தாங்க முடியவில்லை. வெளியில், தன்னுடைய சோர்வைக் காண்பித்துக் கொள்ளாமல், கணவருக்குக்கூடத் தன் வருத்தம் தெரியாதபடி உற்சாகமாக வேலை செய்தாள். ஆனால் அவள் உடல் படுத்து விட்டது. நோய் வந்து படுக்கையில் விழுந்தாள். டாக்டர் சுந்தரேசனுக்கும் அப்போது தான் தம் மனைவியின் நிலை புலப்பட்டது.

சுந்தரேசன் வீட்டிலேயே தங்கி முதலில் தம் மனைவிக்குச் சிகிச்சை செய்ய விரும்பினார். ஆனால் பங்கஜம் அதை விரும்பவில்லை. வேலைக்காரியை மட்டும் அமர்த்திக் கொண்டு, ''நீங்கள்

எல்லோரையும் கவனிப்பது போல் என்னையும் வந்து கவனித்துக் கொள்ளுங்கள். எனக்கு மட்டிலும் தனியாக ஏதும் வேண்டாம்'' என்று சொல்லிவிட்டாள். டாக்டர் எவ்வளவு கேட்டுக்கொண்டும் பங்கஜம் இணங்கவில்லை.

பங்கஜத்திற்கு உடம்புக்கு அதிகமாகி விட்டது. தேறிப் பிழைத்தால் மறு பிழைப்பு என்கிற நிலைமை. டாக்டர் இப்போது பக்கத்திலேயே இருந்தார். அன்றுதான் பாலுவுக்குத் தம்முடைய நிலைமையை விளக்கி, கூடுமானால் உடனே மற்றொரு டாக்டரை அங்கு அனுப்பச் சொல்லி எழுதியிருந்தார்.

இரவு நேரம். பங்கஜத்திற்குச் சுந்தரேசன் மருந்து கொடுத்துக் கொண்டிருக்கும் வேளை. வாசலில் 'கடக் கடக்' என்று இரட்டை மாட்டு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி ஒரு குடியானவன் ஒடோடியும் வந்து டாக்டரின் கால்களில் விழுந்து பிடித்துக் கொண்டான். ''ஐயா, நீங்க தான் காப்பாத்தணும். பிள்ளைத்தாய்ச்சி பத்து நாழிகையாக் கிடந்து துடிக்கிறா. எனக்கு உங்களைத் தவிரக் கதி கிடையாது'' என்று அலறினான்.

பங்கஜத்தைத் திரும்பிப் பார்த்தார் டாக்டர். உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை நோக்கிவிட்டு அவளிடம் என்னவோ சொல்வதற்கு வாயெடுத்தார். ஆனால் பங்கஜத்தின் பலவீனமான குரல் இடையே குறுக்கிட்டது.

''போங்கோ... போயிட்டு வாங்க! ரெண்டு உசிரு துடிக்கிறதாம்!'' என்றாள் இருமிக்கொண்டே.

''பங்கஜம்...நீ...உன்னை இந்த நிலையில் விட்டுவிட்டா?''

''என்னைப்பற்றிக் கவலை வேண்டாம். நானும் நல்லாயிருந்தா...உங்களுடன் வரலாம். போங்கோ, ரெண்டு உசிரு அங்கே!''

டாக்டர் இருதயத்தை இழுத்துப் பிடித்துக்கொண்டு அந்த ஊருக்குத் தம் பெட்டி சகிதம் அவன் கொண்டு வந்த வண்டியில் பிரயாணமானார். இருளில் வண்டி மறைந்து வெகு நேரமான பின்னரும் அவர் வீட்டுச் சன்னல் வழியாக விளக்குத் தெரிந்தது. விளக்கு கண்களுக்கு மறையும்வரை டாக்டரின் கண்கள் இமைப்பதை மறந்து விட்டன.

அங்கே இரண்டு உயிர்கள் இல்லை; மூன்று உயிர்கள்! அதாவது, பிறந்தவை இரட்டைக் குழந்தைகள். தாயும் குழந்தைகளும் சுகமாக இருக்க ஏற்பாடு செய்துவிட்டு, அந்த நள்ளிரவிலேயே வீடு திரும்பினார்.

''இரட்டை உசிரில்லே பங்கஜம்; மூன்று உயிர்கள்! மூன்றும் இல்லை, உன்னையும் சேர்த்து நாலு! இந்த நாலு உயிர்களும் பிழைத்து எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கப் போகின்றன'' என்று பங்கஜத்திடம் சொல்லுவோம் என நினைத்துக்கொண்டே வீட்டிற்குள் நுழைந்தார். வீட்டிற்குள் பங்கஜமில்லை; அந்தக் குல விளக்கு அணைந்து போய், அதன் சவம் மாத்திரம் எண்ணெயற்ற திரியாகக் கிடந்தது.

கதை இத்துடன் முடியவில்லை இன்னும் இருக்கிறது.

இரண்டு மாதங்கள் எப்படியோ அந்தக் கிராமத்துப் பக்கம் தொடர்ந்து சேவை செய்ய டாக்டரும் முயன்றாராம் இயலவில்லை.

''தொண்டினால் பங்கஜத்தை மறக்கலாம் என்று இருந்தேன். நான் போகும் இடங்களில் எல்லாம் அவளைப்பற்றித்தான் விசாரணை; அவளைப் பற்றித்தான் பேச்சு; சிறு பெண்களும் கிழவிகளும் கண்களில் நீருடன் துக்கம் கேட்கிறார்கள். வைத்தியத்திற்கு உபயோகிக்கும் ஒவ்வொரு கருவியும் அவளைத்தான் ஞாபகப் படுத்துகின்றன. என்னால் மன அமைதியுடன் இனி வேலை செய்ய முடியாது. எங்காவது சாந்தியைத் தேடி வெளியே சென்று வருகிறேன். விடை தாருங்கள். மனம் தெளிவுற்று இங்கே வர விரும்பினால் வருகிறேன்'' என்று பாலுவிடம் சொல்லி விடை பெற்றுக் கொண்டாராம்.

பாலுவின் பலவிதமான சமாதானங்களும் டாக்டருக்கு ஆறுதல் அளிக்கவில்லை.

''என் தொழிலே சாவுடனும் சாவின் தோழர்களுடனும் சண்டையிடுவதுதான். அதில் நான் வெற்றி அடைவதாகவே மற்றவர்கள் எண்ணினார்கள். அதனால், அந்தச் சாவு என் மேலேயே இவ்விதம் வஞ்சம் தீர்த்துக் கொண்டதோ என்னவோ! சாவு என்பதும் பிரிவு என்பதும் இவ்வளவு கொடுமையானவையா? -

என்னால் சற்றும் தாங்க முடியவில்லையே! என்ன செய்வேன்!'' என்றாராம்.

அந்த டாக்டருக்கு அப்போது நாற்பது வயசு. இறந்துபோன அவர் மனைவிக்கு முப்பத்தைந்து. அவர்களுக்கும் குழந்தை கிடையாதாம்.

இப்போது அவர் இமயத்தில் ஆசிரமம் ஒன்றில் இருப்பதாக வும் இயற்கையுடனும் அதிகமாகத் தொடர்புகொள்ள நேரம் கிடைப்பதால் மன அலைகளின் வேகம் தணிந்து கொண்டிருப்ப தாகவும் எழுதியிருக்கிறாராம்.

அந்த டாக்டரும் ஒரு கணவர்! மனைவியின் பிரிவு அவரை என்ன பாடு படுத்திவிட்டது! கதையின் இந்தக் கடைசிக் கட்டம் சுழன்று சுழன்று என்னை வட்டமிடுகிறது. இப்படியும் உலகத்தில் பல தம்பதிகள் இருக்கிறார்கள்.

கணவன்...மனைவி...!

அந்தப் புண்ணியவதி பங்கஜம் கொடுத்து வைத்த பெண் பிறவி. ஆனாலும், கடைசி நிமிஷத்தில் கணவன் மடியில் தலை வைத்து உயிரை விட முடியாமல் செய்துவிட்டதே பாழும் விதி! இந்த நினைவு ஒன்றே போதும், அந்த டாக்டரை உயிருடன் கொல்வதற்கு.

அன்பு அழியாத ஒன்று. அதில் ஓர் அணுவாவது வாழ்வில் இருந்தால்தான் உயிரைச் சுமப்பதில் அர்த்தம் இருக்கிறது. எங்கோ படித்த ஞாபகம்: 'அன்பு நிரந்தரமானது. அன்பு செய்வோருக்கும் செய்யப்படுவோர்க்கும் அழிவுண்டு; ஆனால் அன்புக்கு அழி வில்லை.' அதை அந்த டாக்டர் சுந்தரேசன் அறிந்திருப்பதுபோல் என் புருஷரும் தெரிந்து கொண்டிருந்தால்...

## 15

### பாலசந்திரன்

சின்னப்பட்டி இந்த இரண்டு வருஷங்களுக்குள் சரியான முற்போக்கு அடைந்துவிட்டது. மற்றக் கிராமங்களுக்கு இது எடுத்துக்காட்டு. அழகும் வளமும் அமைதியும் சுறுசுறுப்பும் அங்கு

நிறைந்திருக்கின்றன. மக்கள் உழைப்பின் உண்மையைக் கண்டு விட்டனர். இனி அவர்கள் ஒருபோதும் அதிலிருந்து தளரமாட்டார் கள். ஓரிரு பிற்போக்குச் சக்திகளின் சுயநலமும் மக்களுடைய ஒற்றுமையால் உடைந்து விட்டது. இந்தியாவின் ஒவ்வொரு கிராமமும் சின்னப்பட்டியைப் போலவே இருந்தால்?

கண்ணகி திருவிழாவை மக்கள் பெரிய உற்சாகத்தோடு கொண் டாடினார்கள். அவர்களுக்குச் சரியான வழிகோலிக் கொடுத்து விட்டால் அந்த வழியை என்ன அற்புதமாய்ப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்!

சின்னப்பட்டியை நினைத்தால் நாகராஜனையும் கூடவே நினைக்க வேண்டும். அவர் இல்லாவிட்டால் அது ஊராக ஆகியிருக்குமா? கண்ணகி திருவிழாவன்று இரவு கண்ணகி நாடகம் ஊர்ப் பொட்டலில் நடந்தது. நாடகத்திற்கு முன்பு என்னைக் கூட்டத்தில் பேசச் சொல்லி வற்புறுத்தினார்கள். பேசினேன்.

நாடகத்திற்குப் புறப்படுகையில் நானும் நடராஜனும் புறப்பட்டோம். அவருடன் அவர் பெண் சாந்தாவும் வந்திருந்தாள். சாந்தாவை நான் முன்பு பார்த்ததில்லை. பரீட்சையில் பரிசு பெற்றதாகப் பத்திரிகையில் படம் வந்தபோது பார்த்ததுதான். இரண்டு வருஷங்களுக்குப் பின்பு கிராமத்திற்கு வந்திருந்தாள். கிராமத்தின் வளர்ச்சியைப்பற்றி அவள் அப்பா எழுதியிருந்ததைப் பார்த்து, அதற்காகவே வந்தாளாம்.

இன்றைக்குப் படித்த பெண்கள் செய்துகொள்ளும் அநாகரிக அலங்கோலம் ஒன்றும் அவளிடம் இல்லை. யாராவது, 'இவள் பட்டம் பெற்ற படிப்பாளி' என்றால், அதில் கொஞ்சம் சந்தேகந் தான் கொள்வார்கள். எப்போதுமே இப்படிப் பரிசுத்தமானதும், ஆடம்பரம் இல்லாததும் ஆன வாழ்வுதான் அவளுக்காம். கல்வியின் ஆழம் அவள் சொற்களில் ஒலித்தது; அறிவின் அடக்கம் அவள் அமைதியில் தெரிந்தது.

நாடகத்துக்கு மறுநாள் முற்பகலில் தென்னந்தோப்பில் காற்றாட உட்கார்ந்திருந்தேன். தோப்புக்கு ஒருபுறம் வாய்க்கால். சலசலவென்று தண்ணீர் தெளிவாக ஓடிக்கொண்டிருந்தது. மறுபுறம்

நெல் வயல்கள். பார்வை நீளும் வரையில் ஒரே பச்சை. காற்று, புரியாத ரகசியங்களைச் சொல்லிக் கொண்டே நெல் நாற்றின் மேல் மிதந்து வந்து தென்னந் தோப்பினுள் வீசியது. நேற்று இரவு கண் விழித்த அயர்வு வேறு. பக்கத்தில் இருந்த தென்னோலை விரிப்பைப் போட்டுத் தலைக்குக் கையை வைத்தவாறே படுத்தேன். சற்று நேரத்தில் தூக்கம் என்னை முழுவதும் ஆட்கொண்டது.

எத்தனை நாழிகை தூங்கினேனோ, படீரென்று என் நெற்றியில் ஒரு பொருள் வந்து தாக்கியதால் கண் விழித்தேன். வலி பொறுக்க முடியவில்லை. திறந்த வலது கண்ணுக்குள் புருவ மத்தியிலிருந்து ரத்தம் பாய்ந்தது.

அயர்வோடு படுக்கப் போகையில் மேலே தென்னை மரத்தைப் பார்க்கவில்லை. அதன் பழுத்த மட்டை காற்றில் விழுந்து என்னை இவ்விதம் தாக்கிவிட்டது. ஊசி முனையளவு தவறியிருந்தால் வலது கண் பூராவும் போயிருக்கும்.

தோப்பின் மறுகோடியிலிருந்து எனக்காக இளநீர் சீவி கொண்டு வந்த ஆள் இதைக் கவனித்துவிட்டான். விஷயம் நடராஜனுக்கு எட்டிவிட்டது. பதை பதைத்துக் கொண்டு அவரும் சாந்தாவும் வந்து சேர்ந்தார்கள். இதற்குள் அங்கிருந்த ஆட்களே நெற்றியை அலம்பி ஈரத் துணியைக் கட்டத் தொடங்கினர்.

''சாதாரணக் காயந்தான்; ஒரு வாரத்தில் ஆற்றிவிடுகிறேன்'' என்றார் வைத்தியர். எனக்கும் அங்கே சில நாட்கள் வேலை இருந்தது. நடராஜனும் வற்புறுத்தினார். சின்னப்பட்டியிலேயே தங்கிவிட்டேன். அம்மாவுக்கு நடந்ததை விவரமாக எழுதவில்லை. பிரமாதப்படுத்திக்கொண்டு வந்து ஊரையே கூட்டி விடுவார்கள். பத்து நாட்கள் வரைக்கும் வேலை இருப்பதாக மட்டிலும் தெரிவித்தேன்.

வைத்தியர் நெற்றியுடன் வலது கண்ணையும் சேர்த்துக் கட்டியிருந்தார். காயம் ஆறி வரும் வரையில் கண்ணுக்கு அதிக வேலை கொடுக்கக்கூடாதாம். அவசிய நடமாட்டம் இருந்தால் தவிர ஓய்வெடுத்துக் கொள்வது நலம் என்றார். நடராஜன் வீட்டிற்கடுத்த அறையிலேயே சிகிச்சை நாட்களைக் கழித்தேன்.

காற்றோட்டமுள்ள அந்தச் சிறிய அறையை அழகாகவும் சுத்தமாகவும் வைத்துக்கொள்ளும் பொறுப்பைச் சாந்தா ஏற்றிருந்தாள். தினமும் காலையும் மாலையும் அவள்தான் அதைப் பெருக்குவது. முதல்நாள் இது எனக்கு ஒருவிதமாக இருந்தது. "வேண்டாம், இதையெல்லாம் நீங்கள் செய்ய வேண்டாம்!" என்று கேட்டுக் கொண்டேன். "நான்தான் செய்வேன்; செய்ய வேண்டும்" என்று சிரித்துக்கொண்டே கூறினாள் அவள்.

அறையின் ஒரு மூலையில் மேஜைமீது எப்போதும் புத்தகங்கள் அடுக்காக இருந்தன. பத்திரிகைகளையும் பக்கத்தில் மடித்து வைத்திருந்தாள். தினந்தோறும் வீட்டுத் தோட்டத்திலிருந்து வந்த புதிய ரோஜா இரண்டு இலைகளுடன் கண்ணாடிக் கோப்பையில் சிரித்துக் கொண்டிருந்தது. மண்குடத்தில் தண்ணீரும் தம்ளரும் மேஜையின் அடியில் தயாராக இருந்தன.

சாந்தா எனக்கு மிகவும் உதவியாக இருந்தாள். பத்திரிகைகளையும் புத்தகங்களையும் எனக்காகப் படித்துக் காண்பிப்பது அவள் வேலைகளில் ஒன்று. நடுநடுவே இலக்கியம், அரசியல், சமுதாயம் இவை பற்றியெல்லாம் பேச்சு நிகழும்; அந்த நாட்களில் அவள் என்னிடம் நடந்துகொண்ட விதம் எனக்கு மிகப் பிடித்தமாயிருந்தது. கொஞ்சமும் சங்கோசமில்லை; கொஞ்சமும் செருக்கில்லை; இருவரும் ஒத்த இளம் பருவத்தினராக இருந்தும், இப்படி வேற்றுமையின்றி இருக்க முடியும் என்று காட்டுவதுபோல் இருந்தது அவள் செய்கை.

அறையில் சாந்தா இருக்கும் வரையில் என் நினைவுகள் கட்டுப்பட்டுக் கிடக்கும். அப்புறம் ஒவ்வொன்றாகத் தலை தூக்கி மெதுவாக எழும்பப் பார்க்கும். ஜன்னல் வழியே வெளியில் நோக்குவேன். ஏன் வானத்தில் மிதக்கும் மேகம் ஒன்றோடொன்று நெருங்கிச் செல்வது போல தெரிகிறது? ஏன் ஆலமரத்துப் பசுங்கிளிகள் ஒன்றையொன்று வேகமாகத் துரத்துகின்றன? ஏன் அந்த அணிற்பிள்ளை தனியே நின்று எதையோ எதிர்நோக்கிப் பரபரக்கிறது?

சாந்தா அன்று, "இந்தக் கிராமத்தை இத்தனை அழகுள்ளதாய்ச் செய்த பெருமை உங்களுக்குத்தான். இந்தக் கிராமவாசி என்ற

முறையில் நான் உங்களுக்கு நன்றி செலுத்த வேண்டும்'' என்றாள்.

''உங்கள் நன்றியை ஏற்றுக்கொள்வதில் எனக்குச் சந்தோஷந் தான். ஆனால் அதில் முக்கால் பங்கு உங்கள் தகப்பனாருக்குச் சேர வேண்டியது'' என்றேன் நான்.

அவளுடைய முக்கியமான உதவிகளைப் பெற்றுக் கொண்டு நானும் சும்மா இருக்கலாமா? என்னுடைய மகிழ்வைத் தெரிவித்துக் கொண்டேன். அதற்கு அவள் சொன்னாள்; ''எனக்குத்தான் இதில் அதிக சந்தோஷம். புகழ்ச்சிக்குச் சொல்லுகிறேனென்று நினைக்க வேண்டாம். எதிர்காலத்திலே பெரிய மனிதராக வர இருப்பவருக்கு இப்போதேனும் சிசுருஷை செய்யச் சந்தர்ப்பம் கிடைத்ததல்லவா? தங்களுக்கு இந்தக் காயம் ஏற்பட்டது வருந்தத்தக்கதுதான். ஆனால் இந்தக் காயந்தான் உங்களை இத்தனை நாளாய் இங்கே இருக்க வைத்தது. நன்றாகப் பழகவும் வசதி அளித்தது.

வரப்போகிற பெரிய மனிதன் என்று அவள் சொல்லும்போது எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆனால் அவள் உண்மையென நம்பி வெளியிடும் அபிப்பிராயத்தில் நான் ஏன் குறுக்கிட வேண்டும்?

நான் அவளைப்பற்றிக் கொண்டிருந்த கருத்தை அவளிடமே கூறினேன். ''இருபதாம் நூற்றாண்டுக் கலாசாலை மாணவியாகிய நீங்கள் இப்படி இருப்பது ஆச்சரியந்தான். ஏன் உங்களுக்கு மாத்திரம் மற்றவர்களின் போலிப் போக்குப் பிடிக்காது போயிற்று? அந்த வெளி வேஷக் கூட்டத்தில் தனித்து இருப்பது சிரம சாத்தியமான காரியமாயிற்றே!'' என்றேன்.

சிறிது வெட்கத்தோடும் அரும்பிய சிரிப்போடும், ''ஏன் உங்களுக்கு இந்தக் காலத்து மாணவிகளின் மேல் இந்த மாதிரி அபிப்பிராயம்?'' என்றாள்.

''மாணவிகள்மேல் மாத்திரமல்ல; மாணவர்களின் மேலுந்தான். நாட்டிற்கும் நிலைமைக்கும் ஏற்காத விதத்தில் நடந்துகொள் கிறார்கள். தங்கள் பெற்றோர்களின் சிரமத்தால் வரும் பணத்தை ஆடம்பரப் பொருள்களில் செலவு செய்கிறார்கள். வாழ்வில் பயிற்சி

பெறும் காலத்திலேயே இவ்விதம் பொய்யான வேஷத்தினால் ஏன் தங்களைத் தயார் செய்து கொள்ளவேண்டும்?"

சாந்தா இதை ஏற்றுக்கொண்டாள்.

## 16

**சாந்தா:**

எட்டாத ஒன்றை எண்ணிக் கொட்டாவி விடுவதில் புண்ணியம் இல்லைதான; ஆனால் அநேகம் பேர் அடிக்கடி கொட்டாவி விடாமல் இருப்பதில்லை. ஏன் அவர்கள் அப்படிச் செய்கிறார்கள்? அந்த எட்டாத பொருள் கிடைக்கிறதோ, கிடைக்கிறதில்லையோ அது வேறு விஷயம். ஆனால் அப்படிக் கொட்டாவி விடுவதிலேயே ஒரு சுகம் இருக்கிறது. இந்தச் சுகம் மற்றவர்களின் நகைப்புக்கும் பரிகாசத்துக்கும் இடமாக இருக்கலாம். ஆனால் அப்படி நகைப் போரே எப்போதாவது இம் மாதிரி சுகானுபவத்தில் ஓரளவாவது ஈடுபடத்தான் செய்கிறார்கள். எட்டாத சங்கதியைச் சட்டென்று உதறித் தள்ளுபவர்கள் எத்தனை பேர்?

தட்டுத் தடுமாறி நடக்கும் சிறு குழந்தை பலவர்ணச் சிறகு போர்த்த வண்ணாத்திப் பூச்சியைப் பிடிக்க, தான் நின்ற இடத்திலேயே நின்று கை நீட்டுவதுபோல, நான் அந்த ஆசைக் கனவுகளில் ஒவ்வொரு சமயம் இருந்திருக்கிறேன். இப்போதோ குழந்தைக்கு வெகு சமீபத்தில் வந்துவிட்டது வண்ணாத்திப் பூச்சி. ஆனால் அது அக் குழந்தையின் சிறு கரங்களுக்குள் அகப்பட விரும்புகிறதா இல்லையா என்பதுதான் இன்னும் தெரியவில்லை.

'காணாமலே காதல்' என்று கு.ப.ரா. அவருடைய கடைசிக் காலத்தில் ஒரு கதை எழுதியிருந்தாராம். அதை நான் வாசிக்க வில்லை. ஆனால் அந்தத் தலைப்பு எனக்குப் பிடித்திருக்கிறது. பழைய காலத்து ராஜ குமாரிகள்கூட இப்படித்தான் சமீப நாட்டு மன்னர்கள் மீது காணாமலே காதல் கொண்டார்களாம்!

பாலசந்திரனைப்பற்றி ஒவ்வொரு சமயம் கேள்விப்படுவேன். கட்டுரைகளைப் பத்திரிகைகளில் படிப்பேன். கல்லூரி மாணவரா யிருந்து திடீரென இந்த நிலையினை அடைந்து கொண்டிருந்த

வரைப்பற்றிப் பொதுவாகவே நல்ல அபிப்பிராயந்தான். அதிலும் சின்னப்பட்டியைச் சோதனைக்களமாக வைத்துக்கொண்டு, என் தந்தையுடன் சேர்ந்து அதை அவர் அழகுபடுத்தியதில் எனக்கு எல்லையில்லா ஆனந்தம்.

அசட்டு மனம் பலவிதமாக யோசனை செய்யும். என்றாலும், எனக்கும் அவருக்கும் இருந்த தூரம் எட்ட முடியாதது. அவர் கோடீஸ்வரர். ஆனால் அத்தனையும் பொது நலத்திற்காகக் கொண்டு வந்து கொட்டிவிட்டுத் தம்மைப் பற்றியே கவனியாதிருக்கிறார். வயசு முப்பதாகியும் இன்னும் மணம் முடித்துக்கொள்ளவில்லை. ஏன் இங்ஙனம் இருக்கிறார்?

பொதுநலப் போர்வைக்குள்ளே திரியும் வேஷதாரிகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். தங்களைச் சீர்திருத்திக்கொள்ள வழி தெரியாதவர்களெல்லாம் உலகத்தைச் சீர்திருத்தப் புறப்பட்டு விடுகிறார்கள்! என்னதான் வெளியில் கம்பீரத்தை அவர்கள் பாவனை செய்துகொண்டாலும் அவர்களுடைய ஊழல், அவர்களே அறியா வண்ணம், அவர்கள் தேடிக்கொள்ளும் புகழுக்கு முன்பே வெளி உலகுக்கு எட்டி விடுகிறது, பாவம்! அடிப்படையில் ஒழுக்கம் அற்றவர்களின் சொல்லுக்கும் செயலுக்கும் மற்றவர்கள் எங்ஙனம் மதிப்புக் கொடுக்கிறார்கள் என்பது அவர்களுக்கே தெரியாது. பாலசந்திரன் அப்படி இல்லை. அப்பழுக்கற்றவர், அவருடைய எதிரிகள்கூட அம்மாதிரிப் பொய்க்கதை கட்டிவிடத் தயங்குகிறார்கள்.

நான் கொடுத்து வைத்தவள். இல்லையெனில், இந்தச் சில தினங்கள் வந்து அவர் என்னுடனேயே தங்கியிருக்கும் அருமையான சந்தர்ப்பம் கிடைக்குமா? குழந்தைச் சுபாவமுள்ள இந்த இளைஞரின் சாதாரணப் பேச்சுகளில் எத்தனை அரிய கருத்துக்கள் உதிருகின்றன! ஒன்றில் மட்டிலும் அவரைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவருடைய எதிர்காலச் சொந்த வாழ்வுபற்றி; என்னிடம் அவர் கொண்டுள்ள அன்பின் தன்மைபற்றி...

நானும் இதில் உஷாராய்த்தான் இருந்தேன். பெண்கள் எப்போதுமே இவ்விஷயத்தில் அதிஜாக்கிரதையாக இருக்க

வேண்டும் என்பது என் கருத்து. இருவரும் பக்கம் பக்கமாக இருந்தோம். சிரிப்பாகவும், விளையாட்டாகவும், வினையாகவும் பேசினோம் - ஒருவரை ஒருவர் தெரிந்து கொண்டுதான், தம்மைப்பற்றிய உணர்ச்சிகளை மட்டிலும் என்னிடம் மறைத்து விட்டாரரோ? இன்னும் சொல்கிறேன்: அவர் போக்கே நிச்சயமாய் யாருக்கும் தெரியாதிருக்கும் போது நான் மட்டும் எண்ணி அவஸ்தைப் படுவானேன்? சந்தோஷமும் சலிப்பும் மாறிமாறி அடைவானேன்?

ஏதோ சந்தர்ப்பத்தில் நான் சமீபத்தில் மாகாணத்தில் முதலாகத் தமிழில் தேறியதை வெகுவாகப் பாராட்டினார். ஆனால் அந்தப் பாராட்டுதலின் மத்தியிலும் என் சிநேகிதர்களுக்குச் சரியான சூடு ஒன்று கிடைத்தது. ''காலேஜ் பெண்கள், தாய் தகப்பனாருக்குக் கடுதாசி எழுதக்கூடத் தமிழ் தெரியாத அத்தனை மேதைகளாக இருக்கும்போது நீங்கள் எப்படித் தமிழில் முதன்மை அடைந்தீர்கள்?'' என்றார்.

அன்றே என் சிநேகிதர்களுக்குக் கடிதம் எழுதிப் போட்டேன், தமிழில் எழுதினால்தான் பதில் போடுவேன் என்று!

''படிப்பில் மேற்கொண்டு செல்ல உத்தேசமா? இல்லை...'' என்றார்.

''மேலே படிக்கப் போவதில்லை. ஆனால் என்ன செய்வ தென்று தெரியவில்லை.

''தெரியவில்லை...பின்பு?''

நான் சிரித்தேன். அவரும் சிரித்தார். இந்தச் சிரிப்பின் முடிவு? எங்கள் இருவருடைய கருத்தும் ஒன்றாக இருக்குமா?

வீட்டிற்குப் புல் கட்டுக் கொண்டுவரும் கிழவி நேற்றுச் சொன்னாள்: ''நம்ப பொண்ணு சாந்தாவும் பாலு ஐயாவும் அண்ணைக்கு வீதி வழியே ஒண்ணா நடந்து போனதைப் பார்த்தா, ராசாத்தியும் ராசாவும் போலே இருந்திச்சு!''

நான் உண்மையிலேயே அவருடைய ராசாத்தியாகிவிட்டால் அந்தக் கிழவியின் பொக்கை வாய்க்கு ஒரு வீசை சர்க்கரை!

பாலசந்திரன்:

நான் சின்னப்பட்டியில் காயத்துடன் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தபோது இங்கே அம்மாவுக்குக் கடுமையான ஜுரம். நான் எப்படி விஷயத்தை அம்மாவுக்குத் தெரியாமல் ஒளித்து வைத்தேனோ இதே முறையை இங்கு இவர்களும் கையாண்டிருக் கிறார்கள். என்னுடைய முக்கியமான அலுவல்களை அப்படியே போட்டுவிட்டு வந்து விடுவேன் என்ற பயமாம்!

எனக்கு நெற்றியில் இப்போது கட்டு இல்லை. ஆனால் சிறிய பிளாஸ்திரி இருந்தது. பூரணமாகத் தழும்பு மறையும் வரையில் போட்டுக் கொள்வதற்கு வைத்தியர் கையில் மருந்து கொடுத் திருந்தார். அவ்விதமே இங்கு அம்மாவுக்கு ஜுரம் நன்றாய்த் தணிந்துவிட்டது. அதனால் ஏற்பட்ட பலவீனம் குறையவில்லை. பத்துப் பன்னிரண்டு நாட்களுக்குள் இப்படியா இளைத்துத் துரும்பாகப் போவார்கள்?

அம்மாவும நானும் இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் இருந்ததற்காக ஒருவரை ஒருவர் கடுமையாகக் கோபித்துக் கொண்டோம்.

"பாலு! கல்யாணி எனக்குத் துணையாக இல்லாவிட்டால் உனக்கு உடனே எழுதியிருப்பேன். நீ வந்தால் செய்ய முடியாத எத்தனையோ வேலைகளை அவள் எனக்காகச் செய்தாள். வேலைக் காரச்சுப்பன்தான் டாக்டரை அழைத்து வருவான. டாக்டர் சொன்ன படி மருந்து கொடுப்பது, வெந்நீர் வைப்பது, கஞ்சி காய்ச்சிக் கொண்டு வருவது எல்லாம் அவள் வேலைதான். நான் நன்றா யிருக்கையில் சுப்பனைச் சேலை துவைக்கச் சொல்லுவதில்லை துணிகள் எல்லாம் அவள்தான் துவைத்துப் போட்டாள். ஒவ்வொரு நாள் ராத்திரியில் அவளுடைய புருஷன் வீட்டிற்கே வரமாட்டான் அப்போதெல்லாம் என்னிடமே அவளுக்கு வேலை.

''பாலு, நீ ஆயிரந்தான் சொன்னாலும் நமக்கென்று ஒருத்தி இவளைப்போல வீட்டில் இல்லாவிட்டால் என் கதி என்னவாகும்

நான் என்ன, நாளுக்கு நாள் இப்படியே இருக்கப் போகிறேனா? எனக்கு வயசாகவில்லையா? வேலைக்காரிகளைக் கட்டி மேய்ப் பதாலும் சொந்தக்காரர்களைக் கொண்டு வந்து வைத்துக் கொள்வதாலும் ஒன்றும் நடந்துவிடாது. கல்யாணியைப் போல முழுமனசோடு உழைக்கிறவள், அன்பையும் ஆதரவையும் தாராளமாய்த் தருகிறவள், கஷ்டத்தைச் சிரித்துக் கொண்டே சகிக்கிறவள் அவசியம் இந்த வீட்டிற்கு ஒருத்தி வேண்டும். கல்யாணியை அடையத்தான் கொடுத்து வைக்கவில்லை. அவளை மருமகளாக அடையும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. அவள் தான...''

அம்மா சொல்லிக்கொண்டே போனார்கள். நானும் ''இங்கே உங்களுக்கு ஒரு கல்யாணி என்றால், எனக்கு அங்கே ஒரு சாந்தா! சாந்தா இருந்தது எனக்கு எவ்வளவோ உதவியாக இருந்தது. அருமையான பெண். எல்லாம் கல்யாணியைப் போலவேதான். நம்முடைய நடராஜனின் பெண். படிப்பதாக எழுதியிருந்தாரே, அவள் வந்திருந்தாள். எனக்கு இந்த ஒரு வாரமாக அவள்தான் டாக்டர், நர்ஸ், பணியாள் எல்லாம்'' என்றேன்.

அம்மாவின் முகம் மலர்ந்தது. ''ஏன் பாலு, பெண் அழகாயிருக் கிறாளோ? எத்தனை வயசு?'' என்றார்கள்.

எனக்கும் காரணம் புரிந்துவிட்டது.

''அழகாயிருக்கிறாள்; இருபது வயசு'' என்றேன்.

''அடுத்த தடவை நானும் சின்னப்பட்டிக்கு வருகிறேன். என்னை அழைத்துக்கொண்டு போய் அவர்கள் வீட்டில் விட்டு விட்டு நீ எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம்.''

''சரி'' என்றேன் சிரித்துக்கொண்டே.

மேஜையில் சாமான்கள் எல்லாம் கண்டபடி ஒழுங்கில்லாமல் பரவிக் கிடந்தன. என் நெஞ்சுக்குள்ளும் அவ்விதமே நினைவுகள் ஓர் ஒழுங்கிற்கும் கட்டுப்படாமல் பின்னிப் பிணைந்துகொண்டிருந்தன. முதலில் மேஜையைச் சரிப்படுத்த வேண்டும்; உடனே நெஞ்சையும் கவனிக்கவேண்டும்.

நெஞ்சு...ஹூம்...கல்யாணி! முதற் காதல் என்று சொல்கிறார்களே, அந்தக் காதலுக்கு என்னளவில் முழப் பொறுப்பாளி நீ! அன்று உன்னைக் கல்லூரியிலே அதி தீவிரமாகக் காதலித்தேன். ஆனால் அதற்குள்ளேயே அதன் வளர்ச்சியை என்னால் அடக்கிக் கொள்ளவும் முடிந்தது. வெளியில் தெரியும்படி அது மலருமானால் எனது நோக்கத்திற்கு இடையூறாகும் என்றும் கருதினேன். அது மட்டிலுமல்ல; 'பின்பு ஒரு காலும் வாழ்வில் குறுக்கிடாது; அதற்கும் நமக்கும் உள்ள சம்பந்தம் அறவே அற்றுப் போய்விட்டது' என நம்பினேன்.

அந்த முதற் காதல் செத்துச் சாம்பலாய்விட்டது. ஆனால் அந்தச் சாம்பலிலிருந்து திரும்பவும் அது பன்மடங்கு அழகான, பன் மடங்கு பெரிய, பன்மடங்கு தீவிரமான உருவத்தில் புனர்ஜென்மம் எடுக்கக் கிளம்பிவிட்டதே!

கல்யாணி! உன்னை என்றும்விட இன்று அதிகமாக நினைக்கிறேன். உனக்காக எண்ணற்ற பெருமூச்சுகள் விடுகிறேன். என் நெஞ்சில் அணுவளவு பிரதேசத்தையும் விடாதபடி நீ அடைத்துக் கொண்டிருக்கிறாய்.

உன் நினைவு காட்டுத் தீயாக இருதயத்தில் மூண்டுவிட்டது.

அந்தத் தீயின் வெப்பம் ஒவ்வொரு மயிர்க்காலின் வழியாகவும் தன் புகையை வெளியே கக்கப் பார்க்கிறது - நான்... என்னால் இதைத் தணிக்க முடியும்; தணிக்கத்தான் வேண்டும் என்பதை உணர்ந்தாவது தணித்துவிடப் போராடுவேன். பயப்படாதே! ஒருக்காலும் இத்தீயை உன்னிடம் பரவவிட மாட்டேன். இந்தத் தீயால் உன்னையும் உன் குடும்பத்தையும் சர்வ நாசம் ஆக்க மாட்டேன்.

விசித்திரமாகத் தோன்றலாம், மற்றவர்களுக்கு. நேர்மையற்றதாகவும், கண்ணியக் குறைவானதாகவுங்கூட மதிக்கலாம் அவர்கள். நானே என் பலவீனத்தின் தன்மைதான் என்று ஒவ்வொரு சமயம் நினைக்கிறேன். அப்படியில்லை. கல்யாணியின் சகிக்க முடியாத நிலைமை, அவள்பால் ஏற்பட்ட கட்டுக்கடங்காத அநுதாபம், தம்மை அறியாமலே என் தாய் கல்யாணியின் செய்கைகளைப்

பற்றிப் பெருமையோடும் உருக்கத்தோடும் பேசும் பேச்சு, இத்தனைக்கும் மேலாக எங்கள் பழைய ஆழமான அன்பு - இவை அனைத்தும் ஒன்றாகி என்னை இக்கதிக்கு ஆளாக்கி இருக்கின்றன.

நினைக்கக்கூடாது என்று நீங்கள் சொல்லலாம். நினைவுக்கும் நெஞ்சுக்கும் கட்டுப்பாடு ஏற்படுத்தும் என் முயற்சிகள் விரயமாகி விட்டன. நெஞ்சைப்பற்றி உங்களுக்குத் தெரியாதா? உங்கள் ஒவ்வொருவரிடமும் நெஞ்சு இருக்கிறது; வெளியே போட்டிருக்கும் வெள்ளைச் சட்டை, அழகிய துண்டு, இதர அவசிய - அவசியமற்ற வேஷங்கள் இவற்றைக் களைந்து, எலும்புக் கூட்டுக்குள்ளே பத்திரமாய்ப் பதுங்கிக் கிடக்கும் நெஞ்சைப் பிளந்து அதைத் தனிமையில் கேளுங்கள். காதல் தீயில் ஒரு நிமிஷமாவது வெந்து அநுபவப்பட்ட நெஞ்சாயிருந்தால் அந்த வேதனையை ஞாபகப் படுத்தி அதனிடம் கேளுங்கள்.

நினைவுகளை அடக்குவதற்குத்தான் பிரம்மப் பிரயத்தனங்கள் செய்து வருகிறேன். ஆனால் நினைவுகளே எழாதபடி தடுக்கக்கூடிய எந்த யோகீசுவரனுடைய நூல்களையும் நான் படிக்கவில்லை.

# 18

## கல்யாணி

பூமியின் அடிவயிற்றுக்குள்ளே குமுறிக்கொண்டு வழி தெரியாமல் முட்டி மோதிய வண்ணம் இருந்த தீக்குழம்புகள் இன்று எரிமலையாக வெளியே வெடித்துவிட்டன. நெருப்பு, மண், கல், உலோகத் திரவங்கள் இன்னும் எத்தனை எத்தனை அதனிடம் அடக்கி ஒடுக்கப்பட்டுக் கிடந்தனவோ, அத்தனையும் ராக்ஷச ரூபத்தில் வெளியே சீறி வந்துவிட்டன.

ஆம். நெருப்பைக் கக்கிவிட்ட எரிமலை எவ்விதம் சூடு தணியாமல், ஆத்திரம் தீராமல், புழுங்கியபடி அனல் வீசி நிற்குமோ அவ்விதம் நான் இருந்தேன். அறைக்குள்ளே கும்மிருட்டு, படுக்கையில் வந்து சாய்ந்தவுடன் விளக்கை அணைத்துவிட்டேன். அன்று மாலை செய்துகொண்டிருந்த அலங்காரச் சாதனங்கள் திசைக்கு ஒன்றாய்க் கிடந்தன. பட்டுப்புடவை, மல்லிகைப் பூ, ரிப்பன் எல்லாம் மூலைக்கொன்றாய் எறிந்தேன், தலையணையில்

முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மினேன்; விசித்தேன், அழுதேன். கண்ணீர் தலையணையை நனைத்து, அதன் ஈரம் என் கன்னத்தில் வெகுநேரம் படியுமட்டும் தேம்பினேன்.

உள்ளுக்குள்ளிருந்து ஒரு குரல் என் இருதயத்தில் அலறியது. ''பெண்ணே, நீ அழு! பெண் உலகத்திலே அழப் பிறந்தவள்! ஆனால் உன் நிலைமை மிகவும் மோசம். பெண்ணினத்திலும் பாவம் செய்தவள்!

நான் கூடிய மட்டிலும் தடுத்துப் பார்த்தும் பாலுவின் தாய் கேட்கவில்லை. மத்தியானத்திலிருந்து ஒரே பிடிவாதம் பிடித்தார்கள். 'நான் என்ன புதுப் பெண்ணா, அம்மா? அல்லது சந்தோஷமாகப் புருஷனுடன் எங்காவது போகப் போகிறேனா? எனக்கு ஓர் அலங்காரமும் வேண்டாம். தயை செய்து என்னை விடுங்கள்'' என்றேன்.

''இன்றைக்கு நீ ஒன்றும் சொல்லக்கூடாது. இந்த ஒரு நாளைக்கு என் ஆசைப்படி விட்டுவிடு. என்னுடைய குழந்தை சரஸ்வதிக்காக வாங்கி வைத்த நகை அப்படியே இருக்கிறது. அவள் போய் விட்டாள். இனி எப்போதாவது மருமகள் வரமாட்டாளா? அவளுக்காக வைத்திருக்கிறேன். அவசியம் உனக்கு நான் தலை வாரிவிட்டுப் பூ வைத்து இதையெல்லாம் போட்டு அழகு பார்க்க வேண்டும் - பார்! முருகேசன் வந்தவுடன் அப்படியே சொக்கிப் போகிறார், பார்! முருகேசனிடம் சொல்லிக் கட்டாயம் உன்னைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகச் சொல்லுகிறேன். நீங்கள் இரண்டு பேரும் உல்லாசமாகச் சினிமாவுக்குப் போய்விட்டு வாருங்கள் - சின்னஞ்சிறுசாக இருக்கும் பெண் இப்படித் தன்னைத் தானே கவனிக்காமல் இருக்கப்படாது; இனிமேல் நான்தான் உன்னைத் தினமும் இப்படி அலங்கரிக்கப் போகிறேன்'' என்றார்கள்.

எனக்கு இதில் நம்பிக்கை இல்லை. ஆனால் அம்மாவுக்கு இதில் நம்பிக்கை குறையவில்லை. அவர்களுடைய உற்சாகத்தால் என் மனங்கூடக் கொஞ்சம் மாறத் தொடங்கியது. இன்று என்னை மகிழ்வோடு அவர் வெளியே அழைத்துச் செல்வாரா?

அம்மா பழைய காலத்து மனுஷியாக இருந்தாலும் இன்றைய உலகப் போக்கை நன்றாய் அறிந்தவர்கள். நாகரிகமாய் அலங்கரித்து

விட்டார்கள். மூன்று மணி நேரத்திற்குமேல் தொடர்ந்தாற்போல் அவர்களுக்கு இதுதான வேலை. ஒவ்வொன்றாய் எடுத்துப் போட்டுப் பார்த்து, இது சரியில்லை; அது சரியில்லை; என்று கழற்றிவிட்டுக் கடைசியாக அவர்களுக்கும் எனக்கும் திருப்தி அளிக்கும் முறையில் நகைகளைப் போட்டு விட்டார்கள்.

நிலைக் கண்ணாடியின் முன்பு நின்று பிம்பத்தை ஒருமுறை மேலிருந்து கீழ் அணு அணுவாகப் பார்த்தேன். நான்தானா! இப்படி என்னை அழகுபடுத்தி வருஷங்கள் இரண்டோ மூன்றோ ஆகின்றன. பாலுவின் தாயாருடைய கைத்திறனும் அழகுணர்ச்சியும் அப்போது தான் தெரிந்தன. மணவறைக்குள் நுழையும் புதுப் பெண்ணை அலங்கரிக்க இவர்களைத்தான் அனுப்ப வேண்டும்.

என்னை உச்சி மோந்து முத்தமிட்டார் அம்மா. ''என் கண்ணம் மாவுக்குத் திருஷ்டி விழாதிருக்க வேணும்'' என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார்கள். அதேசமயம் கண்களில் துளித்த நீரைத் துடைத்துக் கொண்டே ''என் வீட்டில் இருந்திருந்தால் நாளைக்கு ஒருவிதமாய் உன்னை வைத்து அழகு பார்ப்பேன்!'' என்றார்கள்.

என் புருஷர் வந்தார். வழக்கம்போல் தலை போகிற அவசரக் காரியத்தை அப்படியே விட்டு வந்தவர்போல் பரக்கப் பரக்க வந்தார் துணிமணிகளைக் கழற்றினார். குளித்தார். துவட்டினார். வேற்றுடை உடுத்துக்கொண்டு காபிக்காக மேஜையருகில் உட் கார்ந்தார். வந்ததிலிருந்த அவர் கண்கள் என்மீது சரியாகப் பதியவில்லை. வீட்டுக்குள்ளே வந்தால் அங்கே கிடக்கும் சாமான் களை நாம் ஒவ்வொரு தரமும் உற்றுப் பார்க்கிறோமா? அதைப் போலவே அவரும் என்னைப்பற்றிக் கவனமற்று இருந்தார்.

'தம்பி, இன்றைக்கு இன்னும் நீங்கள் கல்யாணியைக் கவனிக்க வில்லையே! பாருங்கள். கட்டாயம் நீங்கள் இரண்டு பேரும் சினிமாவுக்குப் போய்விட்டு வரவேண்டும். அதற்காக நான் ஏற்கனவே அவளிடம் சொல்லிவிட்டேன். புதுப்படம் ஆரம்பமாமே!'' என்றார் அம்மா.

காபியைக் குடித்துக்கொண்டே என்னை ஏறிட்டுப் பார்த்தார். ஆச்சரியம், ஏளனம், அலட்சியம் - இவை அவர் பார்வையில்

கலந்திருந்தன. 'ஏது, சொல்ல முடியாத ஆடம்பரம் வந்துவிட்டதே இன்றைக்கு!' என்று கேட்பவை போல் அவர் கண்கள் என்னைப் பார்த்தன.

'டக்'கென்று தம்ளரை மேஜைமேல் வைத்துவிட்டு, ''சினிமா வுக்குப் போக நேரம் இல்லை. எனக்கு முக்கியமான வேலை இருக்கிறது. ராத்திரிச் சாப்பாட்டுக்கும் வரமாட்டேன். நீங்கள் வேணுமானால் போய்வாருங்கள்'' என்றார்.

''இல்லை, தம்பி; என்ன அப்படிக் குடி முழுகிப் போகிற வேலை? வந்து கவனித்துக் கொள்ளப்படாதா? நான் இங்கே வந்ததிலிருந்து நீங்கள் ஒரு நாளாவது சினிமாவுக்குச் சேர்ந்து போகிறதைப் பார்த்ததில்லையே!'' என்றார் அம்மா.

''இல்லையம்மா, என்னால் முடியாது'' என்று கண்டிப்பான தொனியில் கூறிவிட்டு விடுவிடுவென்று இறங்கி வெளியே கிளம்பி விட்டார். ஒரு நிமிஷத்தில் திரும்பவும் வந்து கண்ணாடி முன் நின்று தலையை நன்றாக வாரிவிட்டுக் கொண்டு புறப்பட்டார்.

அவர் போன திக்கையே கவனித்துக்கொண்டு ஏமாற்றத்துடன் நின்றார் பாலுவின் அம்மா. ''கல்யாணி'' என்று அவர் அழைத்த போது அந்தக் குரலில் கலக்கம் தட்டியது. மெதுவாக அருகில் வந்து தம் சேலைத் தலைப்பால் என் கண்களைத் துடைத்துவிட்டார்.

''வா, அம்மா! நாம் போகலாம். பாலுவும் ஊரில் இல்லை. புறப்படு'' என்றார்.

''ஊஹூம்; முடியாது; வேண்டாம்'' என்றேன்.

அம்மாவின் பிடிவாதம் அதிகரித்தது. அவர் இஷ்டப்படியே அந்த அலங்காரத்தைக் கலைக்காமல் போய் வந்தேன்.

கொட்டகைக்குப் போகும் வழியெல்லாம் நான் கண்ட காட்சிகள் என்னைப் பரிகசித்தன. தம்பதிகள் இருவர் இருவராய்ச் சேர்ந்து நடந்தனர். சமீபத்தில் திருமணமான ஜோடிகள், குழந்தை குட்டிகளுடன் கலகலப்போடு செல்லும் குடும்பம், வயது சென்ற கணவன் மனைவியர் - இப்படிப்பட்டவர்களின் கூட்டமே எங்களுக்கு முதலில் புலப்பட்டது. இத்தனை பேர்களும் உல்லாசப்

பொழுது போக்குக்காகச் சினிமாப் பார்க்கப் போகிறார்கள். திரையிலே காணும் கேளிக்கையை எதிர் நோக்கி அவர்கள் மனம் துறுதுறுக்கிறது; நானோ?

கொட்டகையில் படம் ஓடிக்கொண்டிருக்கிறது. பாதி ஆட்டம் முடிந்த இடைவேளையில் நான் அவரை - என் புருஷரை - முதல் வகுப்பில் பார்த்தேன். நாங்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கும் அவர் இருந்த இடத்திற்கும் வெகு சமீபம். அவர் மட்டிலுமா வந்திருந் தார்? இல்லை; அவள்! அவர்களைப் பார்த்த ஆரம்பத்திலேயே என் தலை சுற்றத் தொடங்கியது. திரும்பவும் விளக்கை அணைத்துப் படம் காட்டினார்கள். நான் இருளில் அங்கே தான் கவனித்தேன். படத்தில் ஒரு மோசமான காட்சி. அப்போது இங்கு அவர், அவளுடைய தோளில் தம் கரத்தைப் போட்டு அருகில் இழுத்துக் கொண்டிருந்தார். இருளில் பழகிப் போன என் கண்கள் வெளியே வெடித்து விழுந்து விடுபவைபோல் விழித்தன.

அம்மாவும் கவனித்துவிட்டார்கள். நான், ''ஒரு நிமிஷமும் இங்கே இருக்க முடியாதம்மா'' என்று பாதியில் எழுந்தபோது அவர்கள் பதில் சொல்லவில்லை. மௌனமாக எழுந்தார்கள்.

வெளியே வண்டிக்காரன், ''நல்ல படம் இல்லீங்களா? பாதியிலே வந்துட்டீங்களே!'' என்றான்.

ஊரிலிருந்து அப்போதுதான் திரும்பிய பாலு அவருடைய தாயின் வருகைக்காக வாசலில் காத்திருந்தார். சாவி அம்மாவிடம் இருந்தது. ''ஏது இன்றைக்கு மழைதான் வரப்போகிறது! எங்கே இரண்டு பேருமாய்ப் போய் வருகிறீர்கள்? யார், கல்யாணியா, இது? அடையாளமே தெரியவில்லையே!'' என்றார் வியப்போடு.

வானவெளியின் கீழ்ப்பகுதியில் முழு நிலவுக்குக் கொஞ்சம் குறைந்த அளவில் சந்திரன் உதயமாகிக் கொண்டிருந்தது. என்னவோ அந்தச் சமயத்தில் என் பார்வை அந்தச் சந்திரனில் நிலைத்து விட்டது.

அதற்குள் அம்மாவின் கோபக் குரல் ஒலித்தது. அவர்களுக்கு மனம் தாளவில்லை.

மடமடவென்று மத்தியானத்திலிருந்து நடந்தவற்றையெல்லாம் ஓரே மூச்சில் கொட்டிவிட்டார். நான் சுய நினைவு பெற்று வீட்டைத் திறந்து விளக்கைப்போட்டேன். அவர்கள் இன்னும் அவர்கள் வீட்டைத் திறந்து உள்ளே போகவில்லை. விளக்கடியில் நின்ற என்னை அவர் உற்றுக் கவனித்தார்.

அன்றொரு நாள் கன்னத்தைக் கண்டுவிட்டு நின்றாரே, அதே சாயல், அதே உணர்ச்சி, அதே மாதிரிச் சிலை அடித்து வைத்தாற்போல்!

''வா, பாலு!'' என்று அம்மா கூப்பிடுவதைக் கேட்டுத் தள்ளாடியபடியே அவர் பின்னால் திரும்பினார். நானும் கதவைத் தாழிட்டுவிட்டுக் கண்ணாடியின் முன் மறுமுறை வந்து நின்றேன்... அழகு! ஆமாம், இத்தனை அழகு யாருக்காக? பாலைவனத்தில் மலர்ந்த மல்லிகையே, நீ யாருக்காக அங்கே மலர்ந்தாய்!

அதைக் கலைத்துவிடக் கரங்கள் விரைந்தன. கட்டுப்படுத்திக் கொண்டேன். இன்னும் சில மணி நேரம் அந்தச் செயற்கை அழகு என்னுடனேயே இருக்கட்டும். என்னைப் போல அது என்னுடன் சேர்ந்து ஓயாமல் கதறட்டும்.

நினைத்து நினைத்து மயக்கம் வந்துவிடும்போல் இருந்தது. பெரிய காகிதம் ஒன்றையும் பேனாவையும் எடுத்தேன். நினைவுகள் அத்தனையும் பாலுவுக்குக் கடிதமாக எழுதினேன். அதில் என்னைக் கொஞ்சமும் ஒளிக்கவில்லை; மறைக்கவில்லை. என்னுடைய ஆவேச உருவத்தில் நான் அக்கடிதத்தில் இருந்தேன். விடுதலை வெறி, கட்டுப்பாட்டின் உடைப்பு, சுதந்தரத் துடிப்பு - இத்தனையும் எழுதிக் கொட்டிக் கவிழ்த்து விட்டேன்.

பாலு தூங்கும் அறை எனக்குத் தெரியும். அதில் இப்போது இருள் சூழ்ந்திருக்கிறது. இந்நேரம்...நடுச்சாமமாகிய பன்னிரண்டு மணிக்கு... அவர் தூங்கியிருப்பார். எதைப்பற்றியெல்லாம் கனவு காணுகிறாரோ!

அவருடைய அறைச் சன்னல் எப்போதும் திறந்திருக்கும். முன்னால் நின்றபடியே கடிதத்தை உள்ளே போட்டுவிடலாம். இரு

புறமும் பெரிய எழுத்துக்களில் விலாசம் எழுதியிருக்கிறேன். காலையில் எழுந்தவுடன் இதை அவர் முதலில் படிக்கட்டும்... அவரை நன்றாகத் தெரிந்து கொண்டேன் என்பதையும் இதில் சொல்லியிருக்கிறேன். இனி அவர் என்ன செய்வார்?

உலைக்களத்தில் இரண்டு பேர் மாறி வீசும் சம்மட்டிகள் போல் நெஞ்சம் அடித்துக்கொள்ள, கடிதத்தை எடுத்துக் கொண்டு மெதுவாகச் சந்தடியின்றி வெளியே வந்தேன். யார் அது? இதே விநாடியில் எதிர்க் கதவும் திறக்கின்றதே! பாலுவா! பாலுவே தானா!...பாலுதான்! ஏன் என்னையே அப்படிப் பார்க்கிறார்? இந்த வேளையில் ஏன் வெளியே வருகிறேனென்றோ? இவர் ஏன் வருகிறார்?

கால்கள் முன்னும் பின்னும் ஒரே சமயம் இழுத்தன. ஓடோடியும் போய் அவர் கால்களைப் பற்றுவதா? இல்லை கதவைப் படாரென்று சாத்திக்கொண்டு கண்ணீரில் புரள்வதா? என்ன தயக்கம்! என்ன பேதைமை! இத்தனை நாழிகை படுவேக மாய் அவருக்காக எழுதிய கடிதமெல்லாம் வீண்தானா?

இல்லை; இல்லவே இல்லை... பாலு! இதோ உங்களிடம் ஓடோடியும் வருகிறேன். கதவைத் தாழிட்டுக் கொண்டு உள்ளே போய் என்னைத் தனிமை இருளில் தவிக்க விடாதீர்கள்!

பாலுவின் பாத ஸ்பரிசத்தை என்னுடைய கரங்கள் உணர்ந்தன.

# 19

## பாலசந்திரன்:

**ஊ**ரிலிருந்து வந்ததும் வராததுமாக அம்மா சொன்ன கதையைக் கேட்டதிலிருந்து என் மன ஓட்டமே நின்றுவிட்டது. பெயருக்குச் சாப்பிட்டுவிட்டு அறையில் வந்து விழுந்தேன். விளக்கின் ஒளி பிடிக்கவில்லை. அணைத்துவிட்டு இருளில் கண்க ளை மூடினேன். தூக்கம் வரவில்லை.

சன்னல் வழியாகப் பன்னீர் மரம் இருட் படலம் போல் ஆடுவது தெரிந்தது. வானத்தில் மீன்கூடக் காணவில்லை. நிலவின் பேரொளி

அதை விழுங்கிவிட்டது. நல்லவேளையாக, நிலவு பின்புறம் இருந்த தால் என் அறைச் சன்னலுக்குள் புகுந்து எனக்கு வேண்டியிருந்த இருளைக் கிழிக்கவில்லை.

ஒவ்வொரு மணியாக அடிப்பதைக் கேட்டுக் கொண்டே புரண்டு புரண்டு படுத்தேன். தலை கனத்து வந்தது. நெஞ்சில் பளு அதிகமாகிக் கொண்டிருந்தது. பத்து, பதினொன்று, பன்னிரண்டு... இனியும் அறைக்குள்ளே இந்தக் கொடுமையைத் தாங்க முடியாது...

வெளி வராந்தாவில் ஐந்து நிமிஷம் காற்றாட உலவி விட்டுத் திரும்பவும் வந்து படுக்கலாமென்று கதவைத் திறந்தேன். எதிர் வீட்டின் கதவு அதே சமயம் திறப்பது போலவும், திறந்து கொண்டு கல்யாணி என்னை நோக்கி வருவது போலவும் இருந்தது. இது பிரமையா?... விளக்கொளியின் கீழ்ச் சர்வாலங்கார பூஷிதையாய் அவளைக் கண்ட காட்சி என்னை விட்டகலாமல் திரும்பவும் என்னெதிரே வந்து நின்று என்னைக் கேலி செய்கிறதா?

இல்லை; அவள் தடுமாறி நடந்தாள். நானே முன் சென்றேன். என் காலடியில் வந்து விழுந்தாள். முறிந்து விழும் மரமென நானும் அவ்விடத்திலேயே அமர்ந்தேன். அவள் முன்பு செய்து கொண்டிருந்த அலங்காரம் கலைக்கப்படாமலேயே இருந்தது.

''*கல்யாணி!*'' - என் வாயிலிருந்து சொற்கள் வெளி வரவில்லை; அந்தச் சொல்லை உணர்த்த முயன்று காற்றுத்தான் வெளிவந்தது.

தலையைத் தூக்கிப் பார்த்தாள். கூந்தலில் தவழ்ந்து கொண்டிருந்த மல்லிகை ஒரு புறமாய்ச் சரிந்து கொடுத்தது... ஐயோ, அந்த மல்லிகை மணம்!

''*கல்யாணி, என்ன இது? எழுந்திரு.*''

தேம்பும் சத்தம்.

''*என்னால் பொறுக்க முடியவில்லை;... இனிப் பொறுக்க மட்டேன்.*''

விலா எலும்புகளைப் பிளந்துகொண்டு வெளியே யாரோ இதயத்தைப் பிய்த்து இழுப்பதுபோல் இருந்தது எனக்கு.

மெதுவாக அவளைத் தூக்கினேன். முகத்திலும் உடலிலும் படிந்திருந்த மண்ணைத் துடைத்தேன். வார்த்தை எதுவும் சொல்லத் தெரியாதபடி நாலு புறமும் நோக்கிவிட்டு அவளையும் நோக்கினேன்.

கவிஞனின் கற்பனைக் கனவுகளில் மட்டிலும் சஞ்சரிக்கும் பெண் தேவதையாக சோக சிகரமாக அவள் என்னருகே இருந்தாள். அனைத்தும் மறந்து போனவனாய், வேடன் அம்பால் துடிக்கும் மானைக் கண்டு தானும் துடிப்பவன்போல் நான் இருந்தேன்.

நிலா பொழிந்துகொண்டிருந்தது. பன்னீர் மரம் ஆடிக் கொண் டிருந்தது. காற்றிலே மல்லிகையின் வாசனையும் பன்னீர் மலரின் வாசனையும் போட்டியிட்டன. இங்கே என் கரங்களில் கல்யாணி புது மணப் பெண்ணின் கோலத்தில், புது மணப் பெண்ணின் பிரேதமாய்க் கிடந்தாள்.

''கல்யாணி!'' - மீண்டும் தடுமாறினேன்.

என்ன பயங்கரம்! கடலிலே துள்ளும் சுறா மீனைப்போல் ஒரு கணத்தில் துள்ளி எழுந்து நின்றாள். ''இந்தாருங்கள், உங்கள் அறையில் போடுவதற்காக நான் கொண்டுவந்த கடிதம்'' என மடியில் அதைப் போட்டுவிட்டு விர்ரென விரைந்தாள்.

வீட்டுக் கதவைப் படீரென்று அவள் சாத்தும் வரையிலும், அதற்கு மேலும் நான் அங்கு நின்றேன். சன்னல் வழியாக அவள் உருவம் தெரிந்தது. தலையிலிருந்த பூவை எடுத்து ஒருபுறம் வீசினாள். பின்னியிருந்த சடையை மளமளவென்று அவிழ்த்து அந்த ரிப்பனையும் எங்கோ போட்டாள். இப்படி ஒவ்வொன்றாகக் கழற்றி எறிந்துவிட்டு, அவிழ்க்கப்படும் புரண்ட கூந்தலுடன் விளக்கை அணைத்தாள், இந்நேரம் அவள் அங்கே விம்முவாள்; விசிப்பாள்; கதறுவாள். அவளுடைய திறந்த இருதயம் இதோ என் கரத்துக் கடிதத்தில் துடிக்கிறது.



''புயலும் அலையும் சேர்த்து கோரக் கூத்தாடுகின்றனவே, அத்தகைய உணர்ச்சிப் பெருக்கில் இக்கடிதம் எழுதுகிறேன். ஆனால்

இவை பலப் பல நாட்களாக என் மனத்திலே உதித்த எண்ணங்கள்; என்றாகிலும் ஒருநாள் வெளியே வரவேண்டியவை, இன்று வந்துவிட்டன.

இதற்காக ஒருநாளும் நான் வருந்தமாட்டேன். யாருக்கும் பயப்படவும் மாட்டேன். ஒளிவு மறைவு இதில் ஒன்றும் இல்லை.

நாட்டிலே பெண்களை நசுக்கி வைப்பதற்கென்றே ஆயிரம் கதைகளும் பாடல்களும் புராணங்களும் இருக்கின்றன. அவற்றிலே நளாயினியின் கதை என் நினைவுக்கு வருவதுண்டு. தீராத நோயுடைய புருஷரைத் தூக்கிச் சுமந்து பல இன்னல்களுக்கு ஆளான வீரப் பெண்மணி அவள்.

ஆனால் நளாயினி அந்தக் கணவரிடம் தம் வாழ்க்கையில் ஒரு கணமாவது அன்பைப் பெற்றிருப்பாள். - கணவனுடைய அழகு வேண்டாம், செல்வம் வேண்டாம்; அவன் முரடனாகவோ நோயாளியாகவோ இருந்தாலும் சரி; அவனிடம் வேறெந்தச் சுகத்தையும் ஒருத்தி எதிர்பார்க்க வேண்டாம்; ஆனால், 'உண்மை யான அன்பை அவனிடம் எதிர்பார்க்காதே' என்று பெண்ணுக்கு உபதேசம் செய்ய வந்தால் இது அபத்தம்.

அவர் அடிக்கட்டும், உதைக்கட்டும்; விரும்பியபடியெல்லாம் சித்திரவதை செய்யட்டும்; பெண்ணாய்ப் பிறந்த பாவத்தால் அல்ல; அவர் அணுவிலும் அணு அன்பு காட்டினால் அந்த அன்புக்காக நான் மலை மலையான துன்பத்தையும் ஏற்கத் தயார் - இல்லாத ஒன்றை எழுதிப் பயன் என்ன?

வாழ்க்கையை அதன் போக்குப்படியே ஏற்க வேண்டும் என்ற விருப்பத்தால், கல்லூரியில் அரும்பிய தங்கள் நினைவைச் சிரமத்துடன் அழித்துவிட்டு, வந்தபடியே அதை ஏற்றுக் கொண் டேன். வாழ்க்கை இங்கே புதைகுழியாக இருக்கிறது, மத்தியில் என்னருகே தாங்கள் திரும்பவும் வந்துவிட்டீர்கள். நாளுக்கு நாள் என் கணவருக்கு இருந்த இடம் குறைந்து கொண்டே வந்து, இப்போது அதில் முழுவதும் நீங்களே இருக்கிறீர்கள்.

என்மேல் அநுதாபங் காட்டி அதற்காக என்னை ஏற்கச் சொல்லவில்லை, வாழ்வை ஒரு கணத்தில் மகிழ்வோடு முடித்துக்

கொள்வேன். ஆனால் உங்களை - உங்கள் உள்ளத்தை - நான் நன்றாய் அறிவேன். வாழ்க்கை வெள்ளம் என்னைத் துரும்பாக மதித்து அலங்கோலப்படுத்தி விட்டது. நான் துரும்புதான்; ஆனால் திரும்பி விட்டேன். அதை எதிர்த்து நீந்தத் துணிந்திருக்கிறேன். அந்தத் துணிவு உங்களுக்கு இருக்கிறதா?''



கல்யாணி அங்கங்கே காரணம், காரியம், சந்தர்ப்பம் யாவற்றையும் விளக்கி எழுதியிருந்தாள். ஒருதரம், இருமுறை, பல தடவைகள் அதை வாசித்தேன்.

'எழுந்து செல்ல வேண்டும், எதிர் வீட்டின் சன்னலருகே நின்று, 'கல்யாணி!' என ஆர்வம் ததும்ப அழைக்க வேண்டும்; விம்மலை நிறுத்தி அவள் வெளிப்படுவாள்; 'வா, நீ மட்டிலும் வா; இந்த வீட்டிலிருந்து ஒன்றையும் எடுத்து வரவேண்டாம்' என்று அவளை மெதுவாக அழைத்து வந்து, என் நெஞ்சிலே புதைத்து அவளுடைய துன்பக் கண்ணீரால் என் மார்பைக் கழுவிவிடச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும்; அம்மாவை எழுப்பி, 'இந்தாருங்கள் உங்கள் மருமகள்; எங்கள் இருவரையும் ஆசீர்வாதம் செய்யுங்கள்' என்று அவர் காலில் விழுந்து கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும்.'... இப்படியெல்லாம் எண்ணினேன்.

பொழுது விடிவதற்கு நேரம் நெருங்கியது. வானம் காரீயத் தகடென வெண்மையும் கருமையும் கலந்த நிறத்துக்கு வந்தது. பன்னீர்ப் புஷ்பங்கள் கம்மென்ற வாசனையுடன் பொலபொலவென்று தரையில் விழுந்தன; தேனீக் கூட்டத்தின் ரீங்காரம் தொடங்கிவிட்டது.

களைப்பு என் கண்களைச் சுற்ற, 'பெண்ணைப் பற்றி லேசாக நினைக்க வேண்டாம்; பெண்மைக்கு உரிய ஸ்தானத்திலிருந்து அதை நழுவவிட வேண்டாம்; பெண்மை மிக மிக உயர்ந்தது; அநாதியான காலந்தொட்டுத் தமிழ் ரத்தத்தில் ஊறி வரும் அந்தப் பண்பு உலகத்திலேயே நாம் தலை நிமிர உதவியாய் உள்ளது; அந்தப் புனிதப் பெண்மையைச் சரியான முறையில் வளர்த்து அதற்குக் கௌரவம் அளிக்க இந்த ஆண்களுக்குத் தெரியவில்லை! பெண்

களின் துன்பம் எல்லையற்றது; அதற்கு முழுதும் பொறுப்பாளி ஆண் மகன் தான்' என்ற கலக்கத்தோடு படுக்கையில் கண்களை மூடினேன்.

## 20

### கல்யாணி:

**பா**லு ஊருக்குப் போய்விட்டார். அங்கே போய்க் கடிதம் எழுதி அவர் தாயையும் அழைத்துக் கொண்டார். மூன்று நான்கு நாட்கள் ஆகின்றன. இனி இங்கு வருவாரென்று தெரியவில்லை. வந்தாலும் வரலாம். ஆனால் நிச்சயமற்ற காரியம். எல்லா வற்றுக்கும் நான் தானே காரணம்?

அவர் எழுதிய கடிதம் இதோ இருக்கிறது.

''அன்புள்ள கல்யாணி,

எல்லையற்ற பொறுமைக்கு உங்களை இலக்காக்கி வைத்திருக் கிறான் கடவுள். பெண்களிடம் பொறுமையைப் பற்றிச் சொல்ல ஆண்களுக்குக் கொஞ்சமும் உரிமை கிடையாது. பார்க்கத் தகுதியற்றவர்கள் நாங்கள்; என்றாலும் நான் அதைச் சிறிதளவேனும் உணர்ந்து உங்களுக்கு அதைத்தான் திரும்பவும் கூற விரும்புகிறேன்.

நீங்கள் செய்திருக்கும் முடிவுக்கு வர உங்களுக்கு நேரான காரணங்கள் இருக்கின்றன. ஆனால் போதிய காரணங்களும் உரிமையும் இருப்பதனாலேயே அவ்வுரிமையை நடைமுறைக்குக் கொண்டுவர நீங்கள் விரும்புகிறீர்களா? வேறு என்ன வழி என்று கேட்டீர்கள். 'இந்த நிலைமையை ஒரு கணமும் இனித்தாங்க முடியாது' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

கிராமாந்தரங்களிலேயே பழகச் சந்தர்ப்பம் ஏற்பட்டிருப்பதால் இதைப்போல எண்ணற்ற சோகக் கதையை அங்கும் நான் கேட்டிருக்கிறேன். இந்த விஷயத்தில் கிராமங்களைவிட நகரங்கள் சிறிதும் முன்னேறி விடவில்லை. பெண்களின் நிலைமை பெரும் பாலும் அங்கங்கே இப்படித்தான். படித்தவர்களும், இதர அம்சங் களில் போதிய அறிவு பெற்றவர்களுங்கூடச் சரியாகப் பெண்களைக் கண் திறந்து பார்ப்பதில்லை.

நீங்கள் கல்லூரியில் படித்தவர்கள். எதிர்காலக் கனவுகளில் மிதந்தவர்கள். கனவைப் போலவே வாழ்வும் இருக்குமென நினைத்தீர்கள். இப்போது அப்படி இல்லாததால், அந்த கனவை நனவாக்க உங்கள் உள்ளம் துடிக்கிறது. கிராமத்துப் பெண்கள் அப்படி இல்லை. நகரத்திலேகூடப் படிப்பில்லாத பல பெண்கள் அப்படி இல்லை. 'பெண் வாழப் பிறக்கவில்லை; துன்பப்படவே பிறந்தாள்' என்ற பரம்பரை மூட தத்துவம் கொண்டவர்கள். 'அப்படியானால் நான் படித்தது தவறா? என்னையும் மற்ற பெண்களின் நிலைமைக்கு வந்து மூலையில் சாகுமளவும் அழுது கொண்டிருக்கச் சொல்கிறீர்களா? என்று கேட்பீர்கள்.

இல்லை, வேண்டாம். உங்களுடைய போக்கால் ஒரு சிலருக்குத் தான் லாபம். நாட்டின் சூழ்நிலை நம்முடைய மன நிலைக்கு ஏற்றவாறு இல்லை. நாம் எதிர் பார்க்கும் இன்பத்திற்கு மாறாகவே யாவும் நிகழ்ந்தாலும் நிகழலாம். 'அதற்காகக் கவலைப்பட வேண்டாம்; சுற்றுப் புறத்தைக் கண்டு அஞ்சினால் ஒன்றுமே நடக்காது' என்பீர்கள். நானும் அதை ஒப்புக்கொள்கிறேன். அதைவிட மேலாக, நம் மட்டிலும் சமூகத்திற்கு எதிராகத் தனிமையில் கிளம்புவதைவிட, நம்முடைய நலத்தைக் கொன்று விட்டு, அந்தத் தியாகத்தால் சமூகத்தையே சற்று உயர்த்தலா மல்லவா? நம்மைப் போன்றோரைப் புரிந்துகொள்ளும் நிலைக்கும், அதன் மூலம் பெண்ணின் துன்பம் துடைப்பதற்கும் நாம் வழி கோலலாம் அல்லவா?

நாம் எதிர்பார்க்கும் சுகம் அதில் இராது. அதைவிட வேறுபட்ட, அதைவிட உருவான சுகம் இருக்கும். ஒருவருடைய அன்பு காரணமாகத் தங்கள் நோக்கம் இன்று திரும்புகிறது. ஆனால் அங்கே எண்ணற்ற மக்களின் மாசில்லாத அன்பை நீங்கள் பெற லாம். தாராளமாய் அன்பைக் கொடுத்து அன்பைப் பெற்றுக் கொள்ளலாம். அன்பே சிறிதும் இல்லாவிடில் மனித வாழ்க்கை, பாலைவனத்தைக் காட்டிலும் கீழ்ப்பட்டதுதான்.

வயது வந்த ஆண் பெண்களுக்கு, அவர்களுக்கு ஓழிந்த வேளையில் கல்வி போதிக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறேன்.

தங்களுக்குப் பிடித்தமான எந்தக் கிராமத்திலாவது பெண்களுக்கு அறிவளிக்கும் இந்தப் பணியில் தாங்கள் ஈடுபடலாம். சரியான கல்வியின் மூலம் பெண்கள் தங்களை அறிந்துகொண்டால், பெண் சமூகம் விழித்துக் கொண்டால், அப்போது ஆண்களும் பெண்களை மதித்து நடத்தும் மனப்பான்மை சிறிது சிறிதாக ஏற்பட்டுவிடும். இந்த அவல நிலைமையே அப்போது அதிகப்படியான அளவுக்குக் குறைந்துவிடும்.

இவ்வளவும் கூறிவிட்டு மீண்டும் உங்களை ஒரு முறை கேட்டுக் கொள்கிறேன். உங்களால் இன்னும் சற்றேனும் பொறுக்க முடிந்தால் அமைதியாக இருங்கள். மனித மனம் மாற்றத்துக்கு உள்ளாகாததல்ல. உலகில் எந்தப் பொருளும் மாறிக்கொண்டே இருக்கிறது. முருகேசன் மனம் எந்த நிமிஷமும் திரும்பலாம்.

அப்படி இல்லாவிடில் மாத்திரமே உங்களுக்கு மேற்கூறிய யோசனையை அளித்திருக்கிறேன். இறைவன் விரைவில் தங்களுக்கு நல்வாழ்வு அருளட்டும்.

தங்கள் அன்புள்ள

**பாலசந்திரன்.''**

கடிதத்தை மூன்று நாட்களுக்கு முன்பு பொழுது விடியும் வேளையில் வாசலில் கோலமிட வந்த என்னிடம் கொடுத்தார்; அன்றுதான் அவர் ஊருக்குப் புறப்பட்டார்.

படித்துப் படித்துப் பார்த்தேன். புரிந்து கொள்ளவே முடிய வில்லை. எனக்குக் கடிதம் புரிந்தது. ஆனால் பாலுவே அதை எழுதியிருப்பாரா என்பது புரியவில்லை. கடிதத்தில் ஒரே ஒரு பாதியைத்தான் நான் கண்டேன். மறுபாதியை என்னால் காண முடியவில்லை. அது பாலுவின் உள்ளத்துக்குள்ளே இருந்தது.

பாலுவைப் பற்றி எந்த அபிப்பிராயமும் நான் சொல்ல மாட்டேன்; சொல்லுவதற்கும் ஒன்றும் தெரியவில்லை. கோழை என்றோ, அறியாமை நிறைந்தவர் என்றோ எண்ணுவது மகாபாவம். அவர் நூதனமான மனிதர். 'உங்களைத் தெரியும்' என்று நான் கடிதத்தில் எழுதியதற்கு, அவர் அதை ஒப்புக்கொள்ளவும் இல்லை; மறுக்கவும் இல்லை.

பாலு! ஒருவேளை உங்களைத் தவறாக எண்ணிவிட்டேனா? அன்பையும் அநுதாபத்தையும் கண்டு என் நெஞ்சு அப்படிக் கற்பனை செய்துகொண்டதா? - இல்லை; ஒன்றுமே இல்லை; நீங்கள் உத்தமர்! என்னதான் என்னைப் பற்றி நீங்கள் எண்ணியிருந் தாலும் நீங்கள் உத்தமர்!

ஆனால், ''பொறு'' என்று எழுதியிருக்கிறீர்களே, இது நியாயமா? இனி நான் எவ்விதம் பொறுப்பது? நாலு புறமும் கொழுந்து விட்டெரியும் வீட்டிலுள்ள என்னை, ''அங்கேயே இரு; வெளியில் வராதே!'' என்று சொல்லுவது போலல்லவா இருக்கிறது? ''முருகேசன் மனசு எந்த நிமிஷத்திலும் மாறலாம்'' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது சரியா? அந்த மனமாற்றத்தை எதிர்பார்த்து மாதங்கள், வருஷங்கள் கழிந்த பின்னும் நான் இங்கே அதற்காக எப்படித் தவங்கிடக்க முடியும்?

## 21

**சாந்தா:**

கரும்பு ஆலையைப் பார்த்து வருவதற்காக நானும் பாலுவும் புறப்பட்டோம். கிராமத்திலிருந்து ஒருமைல் தூரத்தில், கரும்பு வயல்களுக்கு மத்தியில், பெரிய ஆல மரத்தடியில் இருக்கிறது அது. ஏரிக் கரை வழியாக ஒற்றையடிப் பாதையில் செல்ல வேண்டும். கரையின் ஒரு பக்கம் லை மோதிக் கிடக்கும் ஏரியின் சிவப்புத் தண்ணீர். அதில் நீர்க் காக்கைகள் திடீரென்று முழுகுவதும், கொஞ்ச தூரம் தண்ணீருக்குள்ளேயே சென்று ஏதாவது வேறோர் இடத் திலிருந்து குபீரென மேலே பறந்து திரிவதுமாய் இருந்தன. மறுபுறம் வரிசையாய் மாமரங்கள். பல ஜாதி ஒட்டக்கள் அதில் இருந்தன. பழக் காலமாதலால் சிவப்பாகவும், ஊதாவாகவும், மஞ்சளாகவுமு பலவித நிறங்கள் பலவித உருவங்களோடும் பழக் காய்கள் குலை குலையாய்த் தொங்கின.

அத்தகைய சுற்றுக் காட்சிகளுக்கு மத்தியில் அந்த வேளையில் அவரோடு ஒன்றாய் நடப்பது பிரம்மானந்தமாக இருந்தது எனக்கு. அவருடைய முகத்திலும் அந்த இனபத்தைக் கண்டேன்.

''இதோ, இது என்ன ஜாதிப் பழம் தெரியுமா? சொல்லுங்கள்; கிராமவாசி ஆயிற்றே; பலவித மாமரங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றையும் நான் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றார்.

எனக்கு வெட்கமாக இருந்தது. கிராமத்திலேயே பிறந்து வளர்ந்து, அந்தப் புழுதி மண்ணிலேயே சிறு வயசில் விளையாடித் திரிந்தது உண்மைதான். ஆனால் இதை எல்லாம் யார் தெரிந்து வைத்திருக்கிறார்கள்?

''இவையெல்லாம் அருமையான மாம்பழங்கள்! ஒவ்வொன்றும் ஒவ்வொரு ருசி, ஒவ்வொரு மணம்; ஏரிக்கரைப் பழம் என்றால் எனக்கு எப்போதுமே உயிர்'' என்றேன்.

''ஆகா! நல்ல வேளை; மாம்பழம் என்ற பெரிய உண்மையை எனக்குச் சொல்லிவிட்டீர்களே! கேளுங்கள். இது நீலம் பழம்; அதோ அது மல்கோவா; அங்கே கிரேப், காதர், இன்னும்...'' இப்படிச் சொல்லிக்கொண்டே வந்தார்.

என்னுடைய சொந்தக் கிராமம், புதிதாய் வந்த அந்த மனிதருக்கு எனக்குத் தெரிந்ததைவிட அநேக விஷயங்களைச் சொல்லியிருக்கிறது. சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டே நான் அவருடன் ஓட்டமும் நடையுமாய் நடந்தேன். அவருடன் சேர்ந்து நடப்பது சாதாரணக் காரியம் அல்ல. மகாத்மா காந்தியிடம் கற்றுக் கொண்டாரோ என்னவோ! இன்னும் கொஞ்ச நாட்களில் அவரைப் போல் வேகமாய் நடக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். முடியாவிட்டால், ''இனிமேல் நான் உங்களுடன் வரும்போது கொஞ்சம் மெதுவாய்ப் போங்கள்'' என்றாவது கேட்டுக் கொள்ள வேண்டும்.

வழியில் ஒரு குடியானவக் கிழவன் கும்பிடு போட்டு விட்டு, ''ஐயா, உலாத்தப் புறப்பட்டாப்பலே இருக்கு'' என்றான், பொக்கைப் பல்லைக் காட்டிக்கொண்டே. ''இல்லை; இந்தக் கரும்பாலை வரைக்கும் போகிறோம்'' என்று சொல்லி மேலே நடந்தோம். அவன் ஆனந்தக் கூத்தோடு எங்களைப் பின்புறம் நின்று பார்த்துக் கொண்டே இருந்தான். கிராமத்திலே எங்கும் இதே பேச்சாகிவிட்டது. அவர்களே எங்கள் கல்யாணத்தைச் சற்றும் சந்தேகமில்லாமல், நிச்சயித்து விட்டார்கள்! கல்யாணம் ஆகாமல்,

ஏன் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்கள் கூட, இருவர் எங்களைப்போல் சேர்ந்து செல்வது என்பது இதுவரையில் அங்கே நினைக்கவும் முடியாத காரியமாக இருந்தது.

அடிமைக்கால இந்தியாவில் ராவ்பஹதூர்கள் தங்களுடைய விருந்துக்கு வெள்ளைக்காரக் கவர்னர் தம்பதிகள் வந்துவிட்டால் எப்படிச் சந்தோஷப் பரபரப்பு அடைவார்களோ, அப்படி எங்கள் வரவால் கரும்பாலைத் தொழிலாளிகள் மகிழ்ந்தார்கள். ஆலமரத் தடியில் இருந்த கயிற்றுக் கட்டிலில் நாங்கள் அமர்ந்தோம். இரண்டு நிமிஷங்களில் எங்களுக்காகப் பொறுக்கப்பட்ட கரும்பிலிருந்து சாற்றை வடித்துத் தம்ளர்களில் கொண்டு வந்தார்கள்.

''கொஞ்சம் பொறுங்க, தம்பி'' என்று ஓட்ட ஓட்டமாய் ஓடி வந்தான், வழியில் எங்களுக்குக் கும்பிடு போட்ட கிழவன். மாமரங்களின் சொந்தக்காரன் போலும். பழுத்த ஒரு குலை மாங்கனிகளைக் கொண்டுவந்து வைத்து, ''மாம்பழச் சாறும், கரும்பஞ்சாறும் ஒண்ணாச் சேர்ந்தா எப்படி இருக்கும் தெரியுமா?'' என்றான்.

எப்படி இருந்தது அதன் ருசி என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. திவ்வியமான அந்தப் பானத்தைக் கோடைக் காலத்துப் பிற்பகலில் நீங்கள் ஒரு தரம் சின்னப்பட்டிக்கு வந்தால் அவசியம் கொடுக்கிறோம். சாப்பிட்டுப் பாருங்கள்.

திரும்பும் வழியில் சற்றே ஏரிக்கரையில் ஒதுக்குப் புறமாய் இருந்த மரத்து நிழலில் உட்கார்ந்தோம். மரத்தின் கிளைகள் மிகத் தாழ்வாய் வந்து எங்களை மூடிக்கொண்டிருந்தன. இலைகளின் நடனத்தில் காற்று இன்ப கீதம் ஒலிப்பதைக் கேட்டோம். எனக்கு ஓர் ஆசை தோன்றியது. வழியில் மாடு மேய்த்துக் கொண்டு நின்ற சிறுமி தன் கையில் இருந்த கருப்பங் கழியை வாயில் வைத்துக் கடித்துக் கொண்டிருந்தாள். நானும் அந்தக் கரைக்கு வந்து உட்கார்ந்தவுடன் அவரிடம் ஒரு கரும்பை நீட்டிவிட்டு மற்றதைக் கடிக்கலானேன். ''ரொம்ப அநுபவிக்க வேண்டிய காட்சி!'' என்று கேலி செய்து கொண்டே அவரும் தம் பற்களால் கடித்துப் பட்டையை இழுக்கலானார்.

''என் கரும்புதான் அதிக ருசி!'' என்றேன் நான்.

''இல்லை; என்னுடையதுதான்'' என்றார் அவர்.

''இல்லை; கிடையவே கிடையாது.''

''இல்லை; இந்த ருசி எதிலும் இருக்க முடியாது!''

யாரிடம் உள்ளது அதிக ருசி? இதை எப்படித் தெரிந்து கொள்வது?

'வேண்டுமானால் அதை என்னிடம் கொடுத்துவிட்டு இதைச் சாப்பிட்டுப் பாருங்களேன்' என்று சொல்லத் தோன்றியது எனக்கு. ஏன், அவர்தாம் முதலில் சொல்லட்டுமே! ஆனால் இருவரும் அப்படிச் செய்யவில்லை.

வழி நெடுக மேகத்தைப்போல் மிதந்து வருவதாகவே எனக்குத் தோன்றியது. இப்போது அவரும் வேகத்தைக் குறைத்துக் கொண்டார். நாங்கள் இப்படியே இரவு பகல் எந்த நேரமும் வாழ்வின் கடைசிக் கோட்டைத் தொடும் நாள் வரையில் நடந்து கொண்டே இருக்க வேண்டும் போல் எனக்கு இருந்தது. இந்தப் பாதை, எங்களுக்கு முன்னே நீண்டு செல்கிறதே இது, முடிவற்றதாய் வான முகட்டில் முட்டுமளவும் வளர்ந்து செல்லாதோ?

பாலுவின் அம்மா தங்கமானவர்கள். செருக்கோ, கர்வமோ, பெருமையோ கொஞ்சமேனும் இல்லை. சின்னப்பட்டிக்கு வந்ததி லிருந்து யாரோ கல்யாணி என்னும் பெண்மணியைப்பற்றி அடிக்கடி பேசி வருத்தப்பட்டுக் கொள்கிறார்கள். எங்கள் வீடு, அப்பா, அம்மா எல்லாமே அவர்களுக்குப் பிடித்துவிட்டன. எல்லாவற்றிற் கும் மேலாக எங்கள் வீட்டில் என்னைத்தான் அவர்களுக்கு அதிகம் பிடிக்கிறதாம்! காரணம், சீக்கிரத்திலேயே நான் அவர்களுக்கு மருமகள் ஆகப்போகிறேனாம்! இந்த மாதிரி சுபாவம் படைத்த மாமியார் ஒவ்வொரு வீட்டிலும் இருந்தால், மருமகள் மாமி சண்டை என்பதே மறைந்து போன வஸ்துவாகிவிடும்.

''ஏன் சாந்தா, உன்னைவிடப் பாலு குறைவாய்ப் படித்திருக் கிறானாமே! உனக்குப் பாலுவைப்பிடிக்குமோ?'' என்றார்கள் ஒரு நாள்.

''அவர்கள் கல்லூரியில் படித்தது அவ்வளவுதான். அதற்கு வெளியே அவர்கள் கற்றுக்கொண்டதற்கும் என்னுடைய படிப்புக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதே! பல வருஷங்கள் நான் உங்கள் குமாரரிடம் பாடம் கேட்டால் தான் அவருடைய திட்டத்தையெல்லாம் தெரிந்து கொள்ள முடியும்'' என்றேன்.

''நன்றாகப் பாடங்கேள். சாந்தா. பல வருஷங்கள் என்ன? பல குழந்தைகளுக்குத் தாயாகும் வரையில் கேட்டுக் கொண்டிரு'' என்றார் பரிகாசத்துடன். பின்னும், ''பாலு எங்கே என் கண்ணுள்ள வரையில் பிரம்மச்சாரியாகவே இருந்து விடப் போகிறானோ என்று பயந்தேன். வந்த பெண்களையெல்லாம் தட்டிக் கழித்துவிட்டான். இப்போது, சாந்தா, உன்னால் அவன் மனசு மாறி வருகிறது. ஆனால்...ஆனால்... அவன் போக்கே தனி; நீ பாக்கியவதியாக இருக்கவேண்டும்'' என்றார்.

நான் பாக்கியவதிதானோ இல்லையோ? நம்பிக்கை என்னை முன்னமேயே அவருடைய உரிமை மனைவியாக்கிவிட்டது. இருந்தாலும், இன்னும் அவர் தம் உள்ளத்தை என்னிடம் திறந்து காட்டவில்லை. அவர் எத்தனையோ மடங்கு முன்னிலும் என்பால் அதிகம் நெருங்கிவிட்டார்.

## 22

சுந்தரி:

மாலை நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. மத்தியான்னம் சாப்பிட்டுவிட்டுக் கட்டிலில் படுத்த நான், அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே திரும்பிப் படுத்தேன். உறக்கம் வரவில்லை. உறக்கம் எப்பொழுதுமே வந்து கொண்டிருக்குமா?

எனக்கு என்னவோபோல் இருந்தது. சமீபத்தில் ஒரு மாத மாகவே அப்படித்தான் இருக்கிறது. வாழ்வில் ஒரு இன்பமோ, துன்பமோ, சுறுசுறுப்போ எனக்கு இல்லை. உற்சாகம் மரத்துப் போன இயந்திரம் ஆகிவிட்டேன். ஆனால் இயந்திரமாகவாவது வாழவேண்டும் என்ற பிடிப்பு விடவில்லை.

மணி ஐந்து அடித்தது. படுக்கையிலிருந்து சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்தேன். வேலைக்காரி தயாராக வெந்நீர் போட்டு

வைத்திருந்தாள். குளித்துவிட்டு அலங்காரங்கள் செய்துகொள்ள ஆரம்பித்தேன். அலங்காரங்கள் என்ன? - வேஷம்! ஆம், வேஷம் போட்டுக் கொள்ளத் தொடங்கினேன் என்றுதான் சொல்ல வேண்டும்.

பௌடர் டப்பியிலிருந்த கடைசித் தூளும் நேற்றே தீர்ந்து விட்டது. வாசனைத் தைலம் இன்றைக்கோ நாளைக்கோதான் இருக்கும். சோப்புப் பெட்டிகள் காலியாகிவிட்டன. இப்படி ஒவ்வொன்றுமே தன்னுடைய தேய்வை என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தது. வேலைக்காரி பாப்பாகூட முன் இருந்ததுபோல் அத்தனை மரியாதையுடன் என்னிடம் நடந்துகொள்ளவில்லை.

ஆம்; நான் யாருக்காக இந்த வேஷம் போட்டுக் கொள்கிறேன்? ஜம்புவுக்காக? - இல்லை; அவையெல்லாம் பழைய நாட்கள். எனக்காக, என் வயிற்றுக்காக, என் ஆடம்பர வாழ்விற்காக இந்த வேஷம்.

வாசனைத் தைலம் வறண்டுபோய், அங்கே தேங்காய் எண்ணெயை நிரப்பிக் கொள்ள நான் தயாராக இல்லை. 'வாயிலும் 'சில்க்'குமாய் உடுத்த உடைகளைத் துறந்து நாட்டுச் சேலைகளைக் கொண்டு நான் திருப்தி அடைய முடியாது. ஜம்புவும், முருகேசனும் என்னைத் தயார் செய்து வைத்த ஒய்யார வாழ்விலிருந்து நான் ஒரு காலும் இறங்க மாட்டேன். அவர்கள் உதவி இல்லாமலே நான் பழைய வாழ்வு வாழ முடியும். இதை அவர்கள் அறியட்டும்.

ஜம்புவின் வீட்டில் பெரிய கலவரம் என்று எனக்குச் செய்தி எட்டியது. அவருடைய மனைவியை அவர் கொன்று விட்டா ரென்றே எனக்குச் சொன்னார்கள். அவள் கடைசியில் பிழைத்துக் கொண்டாளாம். அதன் பின்பு அவர் என் வீட்டையே மறந்து விட்டார். முற்றும் வேறு மனிதர் ஆகிவிட்டார்.

ஒருநாள் திடீரென்று வீட்டிற்குள் நுழைந்தபோது ஓடோடியும் சென்று அவரைக் கட்டிக்கொண்டேன். கேள்விமேல் கேள்வி களாய்க் கேட்டு அவரைத் திணறச் செய்தேன். படுக்கையில் உட்கார வைத்து என் சாகஸமெல்லாம் பிரயோகித்தேன். அவர் அதிசயிக் கத்தக்க மனிதராய் மாறியிருந்தார். இரும்பைவிடக் கடினமாகி யிருந்தது அவர் நெஞ்சு.

''நான் இனி இங்கே வரமாட்டேன். என்னை எதிர் பார்க்காதே!...இந்தா, இதில் ஐந்நூறு ரூபாய் இருக்கிறது; வைத்துக்கொள்'' என்று ஒரு கற்றை நோட்டை நீட்டினார்,

''உங்கள் நோட்டு இங்கே யாருக்கு வேண்டும்? அதெல்லாம் முடியாது. உங்களை நம்பியதற்கு இதுதானா பலன்?'' என்றேன்.

அவர் பதில் பேசவில்லை. எழுந்து சென்றார். நான் அவர் கரத்தைப்பற்றியபோது அதை மெதுவாக விடுவித்துக் கொண்டு, ''என்னை மன்னித்துவிடு'' என்று வெளியே வேகமாய்ப் போனார்.

வாழ்க்கையில் குறுக்கிட்ட முக்கியமான இருவர்களில் ஒருவரின் அத்தியாயம் இந்த ஐந்நூறு ரூபாயுடன் முடிந்தது. இன்னும் ஜம்பு அடிக்கடி என் வீட்டு வாசல் வழியாகத்தான் சைக்கிளில் செல்கிறார். ஆனால் வீட்டுப் பக்கம் திரும்புவதில்லை. ஒரு முறை அவர் காதில் போட்டுக் கொள்ளாமலே விரைந்து சென்றார். மறுநாளிலிருந்து அவருக்குக் காரியாலயம் செல்ல வேறுவழி கிடைத்திருக்க வேண்டும். பார்க்கக்கூட முடிவதில்லை.

ஜம்புநாதன் மறைந்தார். ஆனால் முருகேசன்? முருகேசனுமா இப்படி இருக்க வேண்டும்? பல நாட்களாகின்றன, அவர் இங்கு வந்து. கடைசியாக ஒருநாள் அவர் கோபித்துக்கொண்டு போன போது, 'இது அவருக்கு வழக்கமாக வரும் பொய்க் கோபம்; நாளைக்கே திரும்பி விடுவார்; என்னைவிட்டு ஒருபோதும் இவரால் இருக்க முடியாது' என்று நினைத்தேன், அவர் வரவில்லை; வரவும் மாட்டார். என் நினைவு அவருக்கு முற்றும் அற்றுவிட்டது.

காரியாலயத்துக்குக் கடிதங்கள் எழுதினேன். பெற்றுக் கொள்ள மறுத்து திருப்பி அனுப்பிவிட்டார். வேலைக்காரியின் மூலம் சொல்லி அனுப்பியதற்கு, ''எனக்கு இனிமேல் அங்கு வேலை யில்லை; நீ என்னிடம் இதற்காக மறுமுறை வரவேண்டாம்'' என்று சொல்லி விட்டாராம். இந்த முருகேசன் இத்தனை நாள் என்னிடம் இல்லாத என்ன புதிய கொடுமையை அன்று கண்டுவிட்டார்? அந்தச் சம்பவம் அவருக்குக் கோபம் அதிகமாக மூட்டியிருந்தால், அதை அவர் என்னிடம் எதிர்பார்க்கவே இல்லை என்று அர்த்தமா?

அவருக்கு ஏற்கனவே சிறிதளவாவது தெரிந்திருக்கும் என நினைத்தேன். தெரியவில்லை. தெரியாமல் வெகுநாள் இருந்து கொள்ளவும் முடியாது. ஐம்புவின் தொடர்பு அற்றுப்போன உடனேயே, முருகேசன் ஒருவருடைய பராமரிப்பால் காலந்தள்ள முடியாத நிலைமை வந்துவிட்டது. அவரால் கொடுக்கச் சாத்திய மானதையெல்லாம் கொடுத்தார். ஆனால் அவர்களே இதுவரை பழக்கப்படுத்தியிருந்த வாழ்க்கைத் தரத்தில், முன்போல் சுலபமாக இருக்க முருகேசன் உதவி மாத்திரம் போதவில்லை. அதற்காக நான் என் சொகுசான இன்ப வாழ்வைக் குலைத்துக் கொள்வதா? மற்ற எல்லா வீடுகளிலும் மனைவி என்ற பட்டத்துடன் அடுப்பங்கரை அரசிகளாக விளங்குகிறார்களே, அவ்விதம் என்னையும் நினைத்துக் கொள்வதா?

அன்று மத்தியான்னம் மூன்று மணி இருக்கும் வாசலில் முருகேசனின் சைக்கிள் சத்தம் கேட்டது. எனக்குப் பகீரென்றது. ஒரு நாளும் இப்படித் திடுதிப்பென்று மத்தியானத்தில் வருவ தில்லையே! என்னுடைய கை கால்கள் பதறின. உள்ளே இருந்த மனிதர் என்னையும் என்னைச் சுற்றியுள்ள அனைத்தையும் மேலும் கீழும் பார்த்து மருண்டு விழித்தார். எனக்கு யோசனை செய்ய நேரமில்லை. வாசற் கதவைத் தட்டும் சத்தம் என் தலையில் அடிப்பதுபோல் இருந்தது. ஒரு கணம் தாமதித்தேன், வேறு வழி? உணவு கொள்ளும்போது தடை செய்யப்பட்ட பெண் புலியாக மாறிவிட்டேன்.

வாசற் கதவைத் திறந்து நான் குறுக்கே நின்றேன். அவருக்கு உள்ளே நுழைய வழி விடவில்லை. ''வாருங்கள்'' என்று அழைக்கவும் இல்லை.

''என்ன இது? ஏன் இத்தனை நேரம்?'' என்று என்னைத் தள்ளிக்கொண்டு உள்ளே பாய்ந்தார். அங்கே நடுங்கிக் கொண் டிருந்த மனிதரைப் பார்த்தபோது... அடடா!

''யார், சுப்பையாவா? இங்கு எங்கே வந்தாய்?'' - முருகேசன் உறுமினார்.

''உங்களைத் தேடி, ஸார்...உங்களை...''

''இங்கேயா?''

''ஆமாம், ஸார்...''

அந்த மனிதரின் பாடு பரிதாபமாக இருந்தது. முருகேசன் கொலைகாரனது தோற்றத்தில் காணப்பட்டார். வெறுப்போடு என் பக்கம் திரும்பி, ''யார் இது?'' என்று கத்தினார்.

''யாரோ ஒருவர்!'' நான் மின்வெட்டும் நேரத்தில் நிலைமையைச் சமாளிக்கத் தயார் செய்துகொண்டேன்.

''இங்கு என்ன வேலை?''

ஓங்கி அறைவதற்காக வலது கரத்தை உயர்த்தினார். அந்த அறை விழுந்திருந்தால் அந்த நிமிஷமே நான் செத்திருந்தாலும் செத்திருப்பேன். அதை வாங்கிக் கொள்ள எனக்கு விருப்பம் இல்லை.

''நிறுத்துங்கள்; நீங்கள் தாலி கட்டிய பெண்டாட்டி கெட்டுப் போகவில்லை'' என்று அலறினேன்.

அவருடைய கை கீழே விழுந்தது. தலையில் இடி விழுந்தவர் போல் ஆகிவிட்டார். மெதுவாக என்னைத் தலைதூக்கி நோக்கிவிட்டுத் திரும்பவும் வெளியே நடந்தார். சைக்கிளைத் தள்ளிக் கொண்டே அவர் தள்ளாடிச் செல்வதை நான் கவனித்தபோது, உள்ளேயிருந்து சுப்பையா, ''ஐயோ! நான் இந்தச் சூபர்வைஸரிடந்தான் குமாஸ்தாவாக இருக்கிறேன்'' என்றார் உள்ளிருந்தபடியே!

## 23

### பாலசந்திரன்

சென்ற இரண்டு மூன்று மாதங்களாகவே நான் நிதானம் இழந்து வருகிறேன். நினைத்த காரியங்களை நினைத்தபடி செய்வதில்லை. சுறுசுறுப்பும், உற்சாகமும், ஆக்கத் திறனும் அடிக்கடி சோதனைக்குள்ளாகின்றன. இவற்றை நான் உணர்ந்திருக்கிறேன்.

தவிர்க்கவும் முயற்சிகள் செய்கிறேன். முயற்சிகள் பலனளிக்காமற் போவது மாத்திரம் அல்ல; எதிரிடையான முடிவையும் தருகின்றன.

மாலைப் பொழுதுகளில் தனியாக வயல் வரப்புக்களில் உலாவும்போதும், இரவிலே படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுக்கும்போதும், அதிகாலையில் ஐந்து மணிக்குக் கண் களைத் துடைத்துக்கொண்டு விழித்து எழும்போதும் நான் கல்யாணியைப்பற்றித் தவறாக நினைக்கிறேன். அவளுக்கு என்னால் இழைக்கப்பட்ட தீங்கு என்னை அப்படி அவளை நினைக்கச் செய்கிறது. அதே தீங்கினால்தான் நாளுக்கு நாள் நிம்மதி இழந்து வருகிறேன்.

கல்யாணி! மனமறிந்து அந்தப் பிழையை நான் செய்து விட்டேனோ? வேண்டுமென்றே என்னால் இழைக்கப்பட்ட கொடுமையா அது? புகலிடம் நாடி வந்தவளைப் புறக்கணித்து விட்டேன். கடலுக்குள்ளே அமிழ்ந்து கொண்டு உயிருக்கு மன்றாடு பவர்களைக் கரை சேர்க்காமல், அந்தக் கடலின் ஆழத்திலேயே மேலும் சற்றே அழுத்தி விட்டேன். இது நியாயமா?

அவளுக்கு எழுதிய கடிதத்தில் இரண்டுவித யோசனைகள் சொல்லியிருந்தேன். ஒன்று, தற்போதைய நிலைமையிலேயே பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமைப் போர்வைக்குள் புழுங்கு வது. இரண்டாவது, பொறுமை சாத்தியமாகாவிட்டால் கிராமத் திற்கு வந்து பெண்களிடையே சேவை செய்வது.

அவள் எந்தத் தீர்க்கமான முடிவுடன், எந்தத் துணிவான கருத்துடன், எந்த நேர்மையான ஒரே வழியில் என்னை நோக்கி முழு நம்பிக்கையுடன் வந்தாளோ அந்தச் சிறந்த வழியைச் சிதற அடித்து விட்டேன். அவள் என்னிடம் யோசனைகள் கேட்டுப்போக வர வில்லை. ஏற்றுக்கொள்ளச் சொல்லி வந்தாள். பல வருஷங்களாக அவள் அனுபவித்த துன்பங்கள், பல நாட்களாக அவள் தனக்குள் சீர்தூக்கிப் பார்த்த எண்ணங்கள் எல்லாமாக அவளை என்னிடம் கொண்டு வந்து நிறுத்தின. அவளுக்கு இருந்த ஒப்பற்ற துணிவு எனக்கு ஏன் இல்லை?

பொறுமையை மேலும் கடைப்பிடிக்கும்படி பெண்ணுக்கு ஆண் புத்தி சொல்வது மதியீனம். கிராமத்திற்கு வந்து பணி

யாற்றுவதும் லேசான காரியமல்ல. தனித்த இளம் வயசுப் பெண்ணை வெறும் சேவையின் மூலம் மட்டுமே அமைதி தேடிக்கொள் என்று சொல்வது வறட்டு வேதாந்திகளின் பொறுப் பற்ற பேச்சு. பெண் தனிமையில் வாழப் பிறந்தவள் அல்ல; அவ ளால் அது முடியாது. அப்படி இருப்பவர்களும், இருக்க முயல்பவர் களும் இயற்கையின் விரோதிகள். போலி வாழ்க்கையைத்தான் அவர்கள் மேற்கொள்ள முடியும். இதே கொள்கையை நான் விரும்பாத ஒன்றை, அவளுக்குப் போதனை செய்வதா?

சரி; ஏன் அவளைப் புறக்கணித்தேன்? வேண்டுமென்றா...? இல்லை! இல்லவே இல்லை! அவள் காதலால் என் இருதயம் வெந்து சாம்பலாகிக் கொண்டிருந்தது.

அவள் போக்குத் தவறு என்று கருதினேனா? அவள் போக்கால் என் லட்சியம் பாழாகிவிடும், என் கௌரவத்திற்கு இழுக்கு ஏற்படும் என்று பயந்தேனோ? அல்லது அவளுடைய அதி தீவிரமான உண்மையை ஏற்கத் திறனற்ற கோழையாகிவிட்டேனா?

இன்றைக்குச் சிக்கலில்லாத இந்தக் கேள்விகளுக்கு என்னால் தெளிவாகப் பதில் அளிக்க முடியும். ஆனால் அன்று அப்படி இல்லை. எதிர்பாராத உணர்ச்சி வெள்ளத்தின் முன் அமைதியாக இருந்து நான் ஒரு முடிவுக்கு வரவில்லை. அன்றியும், கல்யாணியின் போக்குக்கு ஏற்றபடி அந்தப் புதிய வேகத்தைத் தாங்கும் முறையில் நான் பக்குவமாக இல்லை. சில நாட்கள் கழித்துச் சலனமற்ற சூழ்நிலையில் நான் கல்யாணியின் கடிதத்தைப் பரிசீலனை செய்திருக்க வேண்டும்.

இப்போதுதான் என்ன? இந்த மனப்பளுவை என்னால் இனித் தாங்க முடியாது. - கல்யாணி! இதோ வருகிறேன் உன்னிடம். முன்னால் செய்த தவறுகளுக்காக என்னை முற்றும் மன்னித்துவிடு. என்னைப்பற்றி உலகம் என்ன நினைத்தாலும் சரி, இதுவரையில் என்னை ஏற்றி வைத்துப் புகழ்ந்தவர்கள் இனித் தூற்றினாலும் சரி; உலகமே நம்மை ஒரு மூலையில் ஒதுக்கி வைத்துச் சிரித்தாலும் நாம் தலை நிமிர்ந்து வாழ்வோம்! நமது வாழ்க்கையாலும், துன்பத்தின் மத்தியில் இன்பச் சோலையாக எழுந்த நமது காதலாலும் நாம்

நேர்மையானதும் கண்ணியமுள்ளதுமான காரியம் ஒன்றைத்தான் செய்திருக்கிறோம் எனப் பிறருக்குக் காட்டுவோம். பிறர் நம்மைப் பார்க்கக் கண்களை மூடிக்கொண்டால் நமது மனம் இந்த உண்மையை உணர்ந்து அமைதியை அடையட்டும்.

மத்தியில் சாந்தா இருக்கிறாள். இந்தச் சில மாதங்களில் அவள் என்னிடம் மிகவும் நெருங்கிவிட்டாள்; என்னைத் துணைவனாகக் கொள்ளப் போகிறோமென்ற நம்பிக்கையும் மகிழ்வும் அவள் அழகிய முகத்தில் பூரிக்கின்றன.

சாந்தா, புதுயுகப் பெண். விவரத்தை தக்கபடி எடுத்துச் சொன்னால் புரிந்துகொள்வாள். காதற்கொடி காற்றிலே நடுங்கிப் பதைபதைக்கத்தான் செய்யும். ஆனால் மிக இளசானதால் பக்கத்தில் வேறொரு கொழு கொம்பு கிடைக்கும்போது, அது முன்போலவே தளிர்த்து வளரும். கல்யாணிக்கு நான் அப்படி இல்லை. வாழ்வே நான்தான்! இல்லாவிடில் வாழ்வில்லை!

கல்யாணி! வாழ்வைத் தேடிவந்த உன்னைத் தாழ்வுபடுத்தி விட்டேன். பெண்மைக்கும் பெருந் தீங்கு இழைத்துவிட்டேன். மன்னிப்புக் கேட்டால் ஒன்றும் நடவாது. இதோ, பிராயசித்தமாக உன்னிடம் ஓடோடியும் வருகிறேன்!...நான் உன்னுடையவன்!

இன்றே கல்யாணியிடம் புறப்படவேண்டும். போய் வந்த பிறகு தகுந்த ஏற்பாடுகளுக்குப் பின்னர், சாந்தாவிடம் இதைத் தெரிவிக்க வேண்டும்.

## 24

### முருகேசன்:

**வெ**யிலின் களைப்பைத் தீர்த்துக்கொள்ள அவசர அவசரமாகப் பக்கத்தில் உள்ள என் பூஞ்சோலைக்குப் போகிறேன். சோலையில் நிழல் என் உடலைத் தழுவப் போகும் சமயம் அருகே மலர்ந்து கண்ணைக் கவரும் பூ என் ஆசையைத் தூண்டுகிறது. பறிப்பதற் காகக் கரத்தை நீட்டுகிறேன். அந்தப் பூ அங்கே இல்லை. அது ஒரு பாம்பாக, கருநாகமாக, என்னைக் கொல்லவென்றே வந்த எமனாகப் படமெடுத்து என் கரத்தைத் தீண்டுகிறது - எப்படி இருக்கும் எனக்கு!

சுந்தரியின் வீட்டிலிருந்து சைக்கிளைத் தள்ளிக் கொண்டு சற்று நடந்தேன். கால்கள் பின்னிக் கொண்டன. சைக்கிளில் ஏறினேன். காரியாலயத்தில் அன்று மத்தியான்னம் 'லீவு' கேட்டிருந்ததால் அங்கே போகவில்லை. எங்காவது தனிமையின் மூலையில், இருள் கவிந்த இடத்தில், யார் முகத்திலும் விழிக்காதபடி அன்றையப் பொழுதைக் கழித்தாக வேண்டும். என் வீட்டு அறைதான் இப்போது அதற்கு ஏற்றது.

எங்கே போகிறோம் என்பதை மறந்து சைக்கிளை மிதித்தேன். நல்ல வேளை! தெருவில் இன்னும் ஒரு மயிரிழை தள்ளிப் போகாதிருந்தால் பின்னால் வந்த லாரிக்கு இரையாகி இருக்க வேண்டும். டிரைவர் லாரியை நிறுத்தி, "என் பாவத்தை ஏன் ஐயா கொட்டிக்கிறீங்க? காது, கண்ணு ரெண்டுமே உங்களுக்கு இல்லாமல் போச்சா!" என்று கேட்டுவிட்டு மேலே லாரியை ஓட்டினான். நான் ஒன்றையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. டிரைவர் என்னைத் திட்டினால் என்ன; என்மீது லாரியை ஏற்றிவிட்டுப் போயிருந்தால் என்ன; இரண்டும் எனக்கு ஒன்றுதான். அங்கிருந்து பத்தடி தூரம் வரவில்லை, அதற்குள் வழியில் சென்ற பாதசாரி ஒருவர் மீது வேகமாக வண்டியை மோதிவிட்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். இதற்கு மேலும் எனக்கு சைக்கிளில் இருக்கத் துணிவு இல்லை; கீழே இறங்கி மீண்டும் தள்ளிக் கொண்டு நடந்தேன்.

ஒரே ஒரு கேள்விதான் அப்போது என்னை முழுவதிலும் ஆட்கொண்டிருந்தது. கண்ணெதிரே கடைகளில் பட்ட பலகைகளி லெல்லாம் கடைசியாகச் சுந்தரி கேட்ட அந்த ஒரு கேள்வி கொட்டை எழுத்துக்களில் எழுதியிருப்பதாக உணர்ந்தேன். காதுகளிலும் அந்தக் கேள்விகளின் கர்ஜனை விட்டு விட்டுக் கிடுகிடுத்தது. "நிறுத்துங்கள்; நீங்கள் தாலி கட்டிய பெண்டாட்டியா நான்?"

ஆ! ஒரு வேசிக்கு மனைவியின் ஸ்தானம் என்ன என்பது தெரிந்திருக்கிறது. எனக்கு?

ஒரு வேசிக்கு அவளுடைய உண்மைச் சக்தி தெரிந்திருக்கிறது. எனக்கு?

சுந்தரி...! கல்யாணி...! சுந்தரி...! கல்யாணி...

நடக்கும்போது கீழே விழுந்துவிடாமல் இருப்பதற்கு அந்தச் சைக்கிள் உதவியது. வீட்டைவிட்டு ஞாபகமறதியாய் நாலு வீடுகளுக்கு அப்புறம் போய்த் திரும்பவும் வந்தேன்.

சுந்தரியையும் கல்யாணியையும் ஒப்பிட்டுப் பார்க்க என் மனம் கூசியது. அழகான - வெறி மிதக்கும் அழகுள்ள பேய் உருவம். கடைசியில் தன் வாய் திறந்து அனலைக் கக்கியதே! அதன் முன்பு என்னால் கொடுமைக்கு உள்ளாக்கப்பட்ட என் அரிய செல்வம் கல்யாணியையா ஒப்பிடுவது? கல்யாணியின் அழகும் அறிவும் அன்பும் பொறுப்புணர்ச்சியும் எங்கே? சுந்தரி எங்கே? பின்பு ஏன் இத்தனை நாட்களாய்ப் பித்தனாய்ச் சுந்தரியின் வாலைப் பிடித்துத் திரிந்தேன்?

விளங்கவில்லை. தலைக்குள்ளே பம்பரம் போல் என்னவோ ஒன்று சுழன்றது. கல்யாணி தன் பரிபூரண செளந்தரியத்துடன் என் முன்னே நின்று கேலியாகச் சிரித்தாகப் பிரமை ஏற்பட்டது. ஆனால் உண்மையில் கல்யாணி என் எதிரே வரவில்லை. தன் அறையில் படுத்துக் கிடப்பாள்.

சாத்தப்பட்ட என் அறையில் தோன்றிய கல்யாணியின் கற்பனை நிழல் என்னிடம் கம்பீரக் குரலில் உத்தரவிட்டது: ''ஓடுங்கள்! உங்கள் ஆசைக்குரிய சுந்தரியின் காலைப் பிடித்துக்கொண்டு கெஞ்சுங்கள். அவளிடம் எதை நீங்கள் வழக்கமாக எதிர் பார்க்க வேண்டுமோ அதைத்தான் இன்று கண்டு வந்திருக்கிறீர்கள். உங்கள் கோபத்திற்காக வருத்தம் தெரிவித்து அவள் புன்சிரிப்பைப் பெறுங்கள். அவள் மோகன சுந்தரி! அன்பின் அணங்கு! அவளிடம் நீங்கள் மண்டியிடலாம்; அவள் உத்தரவுக்குக் காத்திருக்கலாம். அவளுக்காக அவமானப் பட்டால்கூட அதில் உங்களுக்குப் பெருமை! - இங்கே நான்? நான் உங்கள் மனைவி. என் அழகைப் பார்க்க உங்கள் கண் குருடாகிவிட்டது; அல்லது அழகின் சமீபம் உங்களுக்குப் புளித்துப் போய், அதனிடமிருந்து உங்களை விரட்டி விட்டது. மனைவி சமைத்துப்போட இருக்கிறாள்; எடுபிடிவேலைகள் செய்யவும், குழந்தைகளைப் பெற்று அவைகளால் வரும் தொல்லைகளை மட்டும் பகிர்ந்து கொள்ளவும், கணவனிடம் அடி உதைபட்டுக் கண்ணீர் விடவும் இருக்கிறாள்! - சுந்தரியின் மேல்

உள்ள கோபத்தை இப்போது சுந்தரியிடம் காட்ட முடியாது. அவள் 'நீங்கள் தாலி கட்டிய மனைவி' அல்ல! ஆகையால் உங்கள் கோபத்தை என் மீது காட்டித் தீர்த்துக் கொள்ளுங்கள். எல்லாவிதத் துன்பங்களுக்கும் உங்களிடமிருந்து பழகிக்கொண்டு வரும் உடம்பு இது. சமயத்தில் நான் வேதனை சகிக்காது சற்று முனகலாம். அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் ஆளும் வர்க்கம். முனகல் குரல் ஒலிக்கும் குற்றத்திற்காக மீண்டும் மீண்டும் என்னை வதை செய்யுங்கள். கோபம் தீரும் வரையில் என்னைக் கசக்கிப் பிழிந்து விட்டுப் பின்பு அன்பைக் கொட்டி எடுத்துக் கொண்டு அவளிடம் ஓடோடியும் சென்று சமர்ப்பணம் செய்யுங்கள். அடியை ஏற்றுக் கொள்ளாதவள் அன்பை அணைத்துக் கொள்வாள்! உங்கள் அன்பை மாத்திரம் அல்ல. ஊரில் யாருடைய எந்தவிதமான அன்பையும்!''

என் அறைக்குள்ளே குறுக்கும் நெடுக்கும் நடந்தேன். ஒரே உக்கிரமாய் இருந்தது. கதவைத் திறந்து கொண்டு கல்யாணியின் அறைப் பக்கம் எட்டிப் பார்த்தேன். அங்கு அவள் நிம்மதியாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் எங்கே என்னை இரண்டுங் கெட்டான் நேரத்தில் எதிர்பார்த்திருக்கப் போகிறாள்? நான் உள்ளே வந்தது அவளுக்குத் தெரிந்திருக்காது. மெதுவாக அவள் அறைக்குள் அடி எடுத்து வைத்தேன்.

அவிழந்த கூந்தல் இருட்படலமென வெள்ளைத் தலையணையில் நெளிந்து புரண்டது. இடது பக்கம் சாய்ந்து மெய்ம்மறந்து உறங்கிக் கொண்டிருந்தாள். திறந்தசன்னல் வழியே வந்த காற்றால் அவள் மார்பகத்தை மறைத்திருந்த துணி, உள்ளே துடிக்கும் இருதயம் போல் வேகமாகத் துடித்துக் கொண்டிருந்தது.

நான் நின்றுகொண்டே அவளை நோக்கினேன். முன்பின் அறியாத அழகிய யுவதி ஒருத்தியை அந்த நிலையில் ஒரு வாலிபன் தனிமையில் நோக்குவதுபோல நோக்கினேன். மெல்ல அவளருகே சென்று, ''கல்யாணி!'' என மிருதுவான குரலில் அழைத்து அவள் தலையை எடுத்து மடிமீது வைத்துக்கொள்ள வேண்டும் போல் இருந்தது. சந்தடி செய்யாமல் நெருங்கினேன். அவளுக்குப் பக்கத்தில் புதிய பொருள் ஒன்று கிடப்பது என் கண்ணில் பட்டது - கடிதம்! நாலைந்து பக்கங்கள் உள்ள நீண்ட கடிதம்!

சத்தம் செய்யாமல் அதை எடுத்தேன். யார் எழுதிய கடிதம் இது? கீழே கையெழுத்துப் பார்த்தபோது பகீரென்றது - பால சந்திரன்! பாலசந்திரன் என் மனைவி கல்யாணிக்கு எழுதிய கடிதம்!

எப்படிப் போனேனோ அப்படியே கடிதத்துடன் வெளியே வந்து என் அறையில் புகுந்து கொண்டேன். அரை மணி நேரம் அதைத் திரும்பத் திரும்பப் படித்து மனப்பாடம் பண்ணிக் கொண்டு முன்போலவே அவளருகில் கொண்டு போட்டுவிட்டு வந்தேன் - எதிர் பார்த்ததற்கு எதிரிடையான கடிதம்! என் கண்ணெதிரே என்னுடைய பயங்கர உருவத்தைக் கொண்டுவந்து நிறுத்திய கடிதம்!

உதய காலத்துக்கு முன்பு இருட்டானது கொஞ்சம் கொஞ்ச மாகத் தன் கருந்திரையை அகற்றிக்கொள்வது போல், எனக்குக் கடிதம் தன் பொருளைச் சிறிது சிறிதாக விளக்கிற்று, கடிதத்தைப் பார்த்தவுடன் நெஞ்சில் கிளம்பிய புயலும் இடியும் இப்போது இல்லை. ஆனாலும் தெளிவற்ற உருவகப்படுத்த முடியாத ஒன்று இன்னும் கடிதத்தில் இருக்கத்தான் செய்தது.

**''இந்த நிலையை இனி ஒரு கணமும் தாங்க முடியாது என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள்.''**

கல்யாணியின் முதற் கடிதத்திற்குப் பதில் இது. தாங்க முடியாத நிலை! இனியும் என்னை அகங்காரம் மூடும்படி விடமாட்டேன். இந்தத் தாங்க முடியாத நிலை ஏன் ஏற்பட்டது? யாரால் ஏற்பட்டது?

**''நீங்கள் செய்திருக்கும் முடிவுக்கு வர உங்களுக்கு நேரான காரணங்கள் இருக்கின்றன.''**

கடிதத்தின் பிற்பகுதியில் என்ன முடிவு என்பது பற்றி லேசாப் புரிந்துகொள்ள முடிகிறது. அவ்வளவு தூரம் அதைப் புரிந்து கொண்டதே போதும். மேலே தெரிய வேண்டாம்; வேண்டாம். அவளுடைய அந்த முடிவில் என்ன தவறு? அந்த முடிவுக்குக் காரணம் யார்?

பாலசந்திரன் அந்தக் கடிதத்திலிருந்து கம்பீரமாகப் பேசினார். நான் வெட்கப்படும்படியாக, என் நிலைய்ய நான் எண்ணிக் கண்ணீர் வடிக்கும்படியாக, உடனே அதற்குப் பிராயச்சித்தம்

தேடும்படியாகப் பேசினார். அதே சமயம் கல்யாணிக்கு அவர், நேர்மையின் சிகரத்தில் நின்று ஓர் ஆண்பிள்ளை எப்படித் தன் சிநேகிதிக்குப் புத்தி சொல்வானோ அப்படிச் சொல்லியிருந்தார். அவரைப்போல நல்ல மனிதர்கள் முன்பு நான்...நான்... எம்மாத்திரம்?

**''மீண்டும் கேட்டுக்கொள்ளுகிறேன், பொறுத்திருங்கள்; முருகேசனின் மனசு மாறலாம்.''**

பாலசந்திரன்! உங்களுக்கு என் நன்றி. உங்கள் வார்த்தை இன்று மெய்யாகிவிட்டது. நான் இன்று காலையில் இருந்த முருகேசன் அல்ல. புதிய மனிதன். இது இந்த நிமிஷ உணர்ச்சியின் பிதற்றல் என்று எண்ண வேண்டாம். ஒருகாலும் தங்கள் கடிதத்தை நான் பார்த்ததாக அவளிடம் காட்டிக்கொள்ள மாட்டேன். சந்தர்ப்பம் வந்தால் அவளே, அதை என்னிடம் கொண்டு வருவாள். சிரித்துக்கொண்டே அதை அவளிடம் படித்துக் காண்பிப்பேன்.

எழுந்து ஓடி அப்படியே என் அன்பு வெள்ளத்தினால் கல்யாணியைத் திக்குமுக்காடச் செய்ய வேண்டும் போல் என் உள்ளம் பரபரத்தது. அவளுடைய மெல்லுடலை என் மார்பகத்தில் சாய்த்துக்கொண்டு கண்ணீரால் அவளை அபிஷேகம் செய்யத் துடிதுடித்தேன். என் அன்பை அவள் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதற்காக நான் எதுவும் செய்யத் தயார்.

கல்யாணியின் அறைப் பக்கம் மீண்டும் நடந்தேன். ஆனால் அவளை எழுப்பவில்லை. இப்போது எழுப்பினால் அந்தக் கடிதம்?

## 25

### கல்யாணி:

அவருடைய அறையில் சத்தம் கேட்டதால் விழித்துக் கொண்டேன். கடிகாரத்தில் மணி நாலுதான் அடித்தது. அதற்குள் எதற்காகவோ காரியாலயத்திலிருந்து வந்துவிட்டார். எழுந்தவுடன் அருகே பாலுவின் கடிதம் கண்ணில் பட்டது. 'திக்'கென்றது மனசு. அவர் பார்த்துவிட்டால்? ஆனால் உடனே தேற்றிக் கொண்டேன்.

பயப்படுவதற்கு இனி என்ன இருக்கிறது? உண்மைக்குப் பயந்து இனி எத்தனை நாள் காலந்தள்ள முடியும்? பல முறைகள் படித்தபடியே தூங்கிவிட்டேன். வாசல் கதவைக் கூடத் தாழிட மறந்து விட்டேன். திரும்பத் திரும்ப அதைப் படித்துத் தானே பொறுத்துக்கொண்டு வருகிறேன்?

கடிதத்தை எடுத்து உள்ளே வைத்துவிட்டு, காபியுடன் அவர் அறைக்குள் சென்றேன். அவர் முகம் பேயறைந்தது போல் இருந்தது. நிச்சயம் கடிதத்தைப் பார்த்திருக்கிறார்! என்னுடைய திடமான கட்டுப்பாட்டையும் மீறிக் கரம் நடுங்கிக் கீழே கொஞ்சம் சிதறியது. முகத்தைச் சர்வ சாதாரணமாக வைத்துக்கொள்ள முயன்றேன். அவர் போக்கை நான் ஏன் தெரிந்ததாகக் காட்டிக் கொண்டு அதற்காக அஞ்ச வேண்டும்? ''கல்யாணி!'' என்று மெதுவாக அழைத்தார்.

எனக்கு வியப்பாக இருந்தது. இப்படிப் பெயர் சொல்லிக் கூப்பிட்டு எத்தனை நாளோ? இப்போது கூப்பிடுவதும் எதற்காகவோ?

''எப்போது ஆபீஸிலிருந்து வந்தீர்கள்?'' என்றேன் என்னை அறியாமல்.

''இப்போதுதான் வந்தேன்; ஒரு நிமிஷம் இருக்கும்.''

நான் அவருடன்தானா இப்போது பேசிக் கொண்டிருக்கிறேன் என்ற சந்தேகம் வந்துவிட்டது எனக்கு. பூகம்பத்தை எதிர்பார்த்த இடத்தில் புதிர் போன்ற பதில் வருகிறதே!

எனக்கும் கொஞ்சம் தைரியம் வந்தது.

''ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? சீக்கிரம் வந்து விட்டீர்களே?'' என்றேன்.

''உடம்பு சரியில்லை; என்னவோ போல் இருந்தது'' என்றார்.

நெற்றியில் கரத்தை வைத்துப் பார்த்தேன். தீயாய்ப் பொசுக்கியது. இப்போது விளங்கியது காரணம், ஏன் அவர் இந்த நேரத்தில் நேரே வீட்டிற்கு வந்திருக்கிறாரென்று; ஏன் அவர் இத்தனை சாந்தமாய்ப் பதில் சொல்லுகிறார் என்று.

கரத்தை மெல்லப் பற்றிப் பக்கத்தில் இழுத்தார். அப்படியே மடியில் என்னைத் தாங்கிக் கொண்டு வெகுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். கண்ணீர் மாலை மாலையாகச் சொரிந்தது என்மேல். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. இதெல்லாம் உண்மை தானா? அவர் மடியில், அவருடைய கண்ணீர் மழையின் ஆனந்தத்தில்தானா நான் திளைத்துக் கொண்டிருக்கிறேன்? இன்னும் எனக்கு நம்பிக்கை இல்லை!

என்னைத் தூக்கி மார்பில் சாத்திக் கொண்டு கேசத்தைத் தம் கரத்தால் கோதிவிட்டவாறே, ''சீக்கிரம் தலைவாரிக் கொண்டு கிளம்புகிறாயா?'' என்றார்.

'எங்கே, ஏன்?' என்று கேட்கும் பாவனையில் ஆச்சரியத்தோடு விழித்தேன்.

''எங்காவது வெளியில் செல்லலாம். கோவில், கடை வீதி, சினிமா..எங்காவது!''

''நானுமா?''

''ஆம்.''

''ஏன், அவள் வரவில்லையா? வரமாட்டேனென்று சொல்லி விட்டாளா?''

அடக்கத்தையும் மீறிக் கேட்டுவிட்டேன். பதில் எந்த விதத்தில் வந்தாலும் சரியென்று இருந்தேன்.

ஒரு கணம் நிதானித்து, 'அவள் வரவில்லை; அவள் வரவும் மாட்டாள்!'' என்றார். ஆனந்தம் பொங்க நான் கல்லாக நின்றேன்.

''ஆம் கல்யாணி. இதை நீ நம்புவாயா?'' என்று கெஞ்சுவது போல் கேட்டார்.

நான் இந்த உலகத்தில் இல்லை. வானத்தின் பரந்த வெளியில் மேகக் குதிரையின் மீது ஒய்யாரமாக ஊர்ந்து செல்லும் என் கணவர் முருகேசனின் மடியில் என்னையே மறந்து இன்ப லாகிரியில் மயங்கிக் கிடந்தேன் - ஈசா! இந்த ஒரு கணம் என் வாழ்வில் கிடைக்காத ஓர் அரும் பெரும் செல்வமடா!



அதற்குப் பிறகு மூன்று மாதங்கள் சென்றன, மூன்று விநாடிகளுக்குள்! எங்களுக்குள் எந்த ரகசியமும் இனிக் கிடையாது. நடந்தவை எல்லாம் கதைகதையாக ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டோம். முரட்டுத்தனமும், பிடிவாதமும், வெறியும் கொண்டவர் என்றெல்லாம் ஒரு சமயம் பழி சுமத்தினேனே, அவர் இப்போது என் செல்லக் கணவர்; பச்சைக் குழந்தை போல் சுற்றிச் சுற்றி வந்து தன் அன்பைப் பரிமாறுகிறார்.

''ராணி! உன் உத்தரவைக் கொஞ்சமும் மீறாத அடிமை நான். தவறுதலாய் ஒருகாலும் நடக்கமாட்டேன். அப்படி ஏதும் நடந்தால் நீ அளிக்கும் தண்டனையை மகிழ்வோடு ஏற்றுக் கொள்கிறேன். இப்போது மார்க்கட்டுக்குப் போனவன் தக்காளிப் பழம் வாங்க மறந்து விட்டேனே; அதற்காக'' என்பார் விளையாட்டாக.

ஒரு நாள் இரவு தோட்டத்துப் பக்கம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும்போது, ''இனி அம்மாவுக்குக் கடிதம் போட வேண்டியது தான். இப்போது உன்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. வேலைக்காரியின் உதவியும் உனக்குப் போதாது. பெற்றவர்களுக்குத் தானே தெரியும் பெறப் போகிறவர்களின் அருமை?'' என்றார்.

நான் சிரித்துக் கொண்டு தலை குனிந்தேன்;

''திருட்டுப் பயல் எத்தனை மாசத்தில் பிறக்கப் போகிறான்?'' என்று காதருகில் வந்து மெதுவாகக் கேட்டார்.

''ஐந்து மாதத்தில்'' என்றேன்.

''நல்ல பெயராய் ஒன்று சொல்லு. என்ன பெயர் வைக்கலாம்?''

''நீங்கள்தாம் சொல்லுங்களேன்!''

''சொன்னால் மறுக்காமல் அதை வைத்துத் தர வேண்டும்! பாலசந்திரன்!''

என் உடம்பெல்லாம் புல்லரித்தது. உண்மைதான். சரியான செய்கை.

''பெண் பிறந்தால்?'' என்றேன் என் ஆசையை வெளிப்படுத்தி. உடனே, ''சுந்தரி என்று கூப்பிடலாமா?'' என்றேன் கேலியாக.

அவர் முகம் சுருங்கியது. ''வேண்டாம் - பாலம்மா'' என்றார்.

# 26

## பாலசந்திரன்:

சில நாட்களுக்கு முந்திதான் கல்யாணியைப் பார்க்க அவள் ஊருக்குப் போயிருந்தேன். வீட்டு முன் கதவு தாழ்ப்பாள் போடப் பட்டிருந்தது. கதவைத் தட்டினேன். சிறிது நேரத்தில் கல்யாணி வந்து கதவைத் திறந்தாள்.

''வாருங்கள்'' என்று புன்சிரிப்புடன் வரவேற்றாள், உள்ளே போனேன். வீட்டில் ஏதோ மாறுதல் தென்பட்டது.

''அவர் இருக்கிறாரா? எங்கே போய்விட்டார்? இன்றைக்கு விடுமுறை நாளாயிற்றே?'' என்று கேட்டேன்.

''உள்ளே இருக்கிறார்'' என்று அடுக்களையிலிருந்து முருகேசனை அழைத்து வந்தாள் கல்யாணி. மேலே அங்கவஸ்திரம் இல்லாமல் கையில் பிடித்த வெண்கலக் கரண்டியுடன் பரிசாரகன் உருவத்தில் என்னை நமஸ்கரித்தார் முருகேசன். இருவர் முகத்திலும் ஒரே மகிழ்ச்சி! நான் கனவுதான் கண்டேனா?

கல்யாணியின் குதூகலம் என்னைப் பிரமிக்கச் செய்தது. நெற்றி நிறைய குங்குமம், பின்புறச் சடையிலிருந்து சரிந்து ஒதுக்குப் புறத்தில் தெரிந்த மல்லிகைக் குவியல். அதன் வாசனை. யாவற்றிற்கும் மேலாகக் குல விளக்கெனச் சுடர்விடும் அவள் முகத்தின் தூய்மைத் துறுதுறுப்பு. ஓடி ஓடி அவளும் அவள் புருஷனும் எனக்கு உபசரணையாகச் செய்யத் தொடங்கினார்கள். நான் எதிர்பார்த்து வந்த கல்யாணி எங்கே? இவள் எங்கே?

''இங்கே பாருங்கள், இன்றைக்கு ஆபீசுக்கு லீவு எழுதிப் போடுங்கள்!'' என்று உத்தரவிட்டாள் கணவனை.

''உன் உத்தரவுக்குக் கீழ்ப்படிகிறேன். ஆனால் நீ சொல்லு முன்பே ஆபீஸ் மூடிவிட்டார்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்!'' என்றார் முருகேசன்.

''ஏன் அண்ணா, அம்மாவை அழைத்து வரவில்லை? சீக்கிரம் அழைத்து வாருங்கள். அவர்கள் இங்கேயே இருக்கட்டும், கொஞ்ச நாளைக்கு. இப்போது பார்த்தால் அவர்கள் எவ்வளவு சந்தோஷப் படுவார்கள், தெரியுமா?'' என்றாள்.

''ஆமாம், அவசியம் அழைத்து வாருங்கள்! 'உங்களுக்குப் பேரன் பிறக்கப் போகிறான் சீக்கிரம்; உங்களை ஒத்தாசைக்குக் கல்யாணி கூப்பிடுகிறாள்' என்று சொல்லுங்கள் என்றார் முருகேசன் சிரித்துக்கொண்டு.

பொய்க் கோபம் கல்யாணியின் முகத்தைச் சிவக்க வைத்தது. அவள் ஒரு தாய்! தாய்மையின் அழகில் அந்தப் பெண்மை பூரணத்துவம் பெற்று மின்னியது என் முன்பு.

முருகேசன் ஆரம்பித்தார்:

''என்ன கல்யாணி, இனியும் நாம் சும்மா இருந்தால் நன்றி கெட்டவர்களாவோம். நம்மை ஒன்று சேர்த்து வைத்துவிட்டு அவர் வேடிக்கை பார்க்கிறார். அவருக்கும் நாம் ஓர் ஏற்பாடு செய்தாக வேண்டும். என்ன சொல்கிறாய்?'' என்றார்.

''தாராளமாக'' என்றாள் கல்யாணி.

''சின்னப்பட்டிக்கு வாருங்கள்; வந்து உடனே ஏற்பாடுகள் செய்யுங்கள். அதற்கு அழைத்துப் போகத்தான் வந்தேன். அம்மாவும் உங்களைக் கண்டால் பிரம்மானந்தம் கொள்வார்கள். அவர்களே அங்கு ஒரு பெண் பார்த்து வைத்திருக்கிறார்கள்'' என்றேன்.

''பெண்ணா? - பெயர்?'' என்றாள் கல்யாணி.

''சாந்தா!''

''அப்படியானால் பெண் பிறந்தால் சாந்தா என்று பெயரிடும்படிதான் தேவியிடமிருந்து கட்டளை பிறக்கும்'' என்றார் முருகேசன் கடைக்கண் சிரிப்புடன்.

□





